பாக்கெட் நாவல்



# முகம் இல்லாத பெண்ணை

ebook design by - TAMIL NESAN

ராஜேஷ்குமார்

# முகம் இல்லாத பொம்மைகள்

- ராஜேஷ்குமார்

## 1

பூஜையறையிலிருந்து அஷ்டலட்சுமி ஸ்தோத்திரத்தோடு வெளிப்பட்டாள் ஹம்சினி. தேனைப் பூசிக்கொண்ட மாதிரியான குரல்.

"யாதேவீ! சர்வ பூதேஸீ லட்சுமி ரூபோ சமஸ்திதா!
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை
நமோ நம!"

சமையலறையில் ஏதோ வேலையாய் இருந்த அபர்ணா குரல் கொடுத்தாள்.

"ஹம்சினி..."

உதட்டில் ஸ்தோத்ரம் நின்றது.

"என்ன அண்ணி....?"

"பூஜை ரூமைவிட்டு வெளியே வர இவ்வளவு நேரமா...?"

"அண்ணி...! இன்னிக்கு என்ன கிழமை? வெள்ளிக்கிழமை. பூஜையறையைச் சுத்தம் பண்ணி முடிக்கவே பதினைந்து நிமிஷமாயிருச்சு. அதுக்கப்புறம் சாமி படங்களையெல்லாம் துடைக்க...."

"சரி... சரி...! உங்க அண்ணன் உன்னைக் கூப்பிட்டார். போய் என்னான்னு கேளு...."

ஹம்சினி வீட்டின் முன்பக்கம் இருந்த அறையை நோக்கிப்

போனாள். கண்களுக்கு ரீடிங் கிளாஸ் கொடுத்து ஹிண்டு பேப்பரை மேய்ந்து கொண்டிருந்த ராஜாமணி நிமிர்ந்தார். ஹம்சினியைப் பார்வையில் வாங்கியதும் பேப்பரை இரண்டாய் நாலாய் மடித்து வைத்துவிட்டு "வா... ஹம்சினி...! இப்படி வந்து உட்கார்...." என்றார்.

ஹம்சினி பி.வி.சிக்கு சாய்ந்ததும் கேட்டார்.

"என்ன முடிவு பண்ணியிருக்கே... ?"

"நீ எதைக் கேக்கிறேண்ணா....?"

"ஓ... அது கூட உனக்கு ஞாபகம் இல்லையா...?

அந்த அம்பத்தூர் மாப்பிள்ளை வீட்டுக் காரங்களுக்கு என்ன பதிலைச் சொல்றது...? நீ குளியலறையில் இருக்கும்போது ரெண்டு தடவை போன் பண்ணிட்டாங்க"

[illegible] தலை குனிந்து நகக்கண்களைப் பார்த்தாள். அரை நிமிஷ [illegible]னத்துக்குப் பிறகு தலை நிமிர்ந்தாள்.

"என்னோட கல்யாணத்துக்கு இப்ப என்ன அவசரம்... இன்னும் கொஞ்சநாள் போகட்டுமே.. இப்பத்தான் ஒரு வேலைக்குப் போய்ச் சேர்ந்திருக்கேன்."

"நீ வேலைக்குப் போறதுக்கும் கல்யாணம் பண்ணிக்கிறதுக்கும் என்ன சம்பந்தம்...? நம்ம அப்பா அம்மா ரெண்டு பேர்ல யார் இன்னிக்கு உயிரோடு இருந்தாலும் சரி உன்னோட கல்யாணம் இந்நேரம் நடந்து இருக்கும்...."

"நான் எதுக்குச் சொல்ல வர்றேன்னா....?" ஹம்சினி பேச்சை இழுக்கவும் சமையலறையிலிருந்து வேகவேகமாக வெளிப்பட்டாள் அண்ணிக்காரி அபர்ணா.

"இதோபார் ஹம்சினி! இப்ப உனக்கு வயது இருபத்திமூணு. இந்த வயசுலதான் பெண்கள் பார்க்கிறதுக்கு லட்சணமா இருப்பாங்க. இன்னும் ரெண்டு வருஷம் போனாப் போதும் மூஞ்சி முத்தின வெண்டைக்காய் மாதிரிப் போயிரும். இப்ப வந்திருக்கிற இடம் சாதாரண இடம் இல்லை. பையன் எம்.பி.ஏ. படிச்சுட்டு ஒரு பேங்கல நல்ல போஸ்ட்ல இருக்கான். வயசு முப்பது கூடக் கிடையாது. இருபத்தொம்பதுதான். உயரம், நிறம் எல்லாமே உனக்கு ஏத்தமாதிரி இருக்கு. அவங்க ரெண்டு நாளைக்கு ஒரு தடவையாவது போன் பண்ணிப் பெண் பார்க்க எப்ப வரட்டுமென்று கேட்கிறாங்க."

ராஜாமணி இப்போது குறுக்கிட்டான்.

"பையனோட போட்டோவை நீ பார்த்தியா இல்லையா?"

"பார்த்தேன்..."

"உனக்கு ஓ.கே.தானே...?"

"ஓ.கே.தான்...! இருந்தாலும்..."

"இந்த இழுப்பெல்லாம் இங்கே வேண்டாம். மாப்பிள்ளை வீட்டுக்காரங்களை என்னிக்குப் பெண் பார்க்க வரச்சொல்லலாம்"

"அ... அ... அடுத்தவாரம்..."

"ஏன்... இன்னிக்கு நாள் நல்லாயிருக்கு. அதே மாதிரி நாளைக்கும் நாள் நல்லாயிருக்கு"

"வே... வேண்டாம்..."

"ஏன்...?"

"இன்னைக்கு ஆபீஸில் வேலை அதிகமாயிருக்கும். பர்மிஷன் கேட்டாக் குடுக்க மாட்டாங்க.

"சரி... நாளைக்கு...?"

"நாளைக்கு வந்து... பிளட் டோனர்ஸ் அஸ்ஸோஷியேஷன் மீட்டிங் இருக்கு."

"ஆபீஸ் வேலை போதாதுன்னு உனக்கு சமூகப் பணி வேற...! சனி, ஞாயிறு என்னிக்காவது நீ வீட்ல தங்கியிருக்கியா...?"

"அ...ண்...ணா...!"

"இதோபார்...! இனிமே நீ என்ன சால்ஜாப்புச் சொன்னாலும் நான் கேட்கமாட்டேன். வர்ற புதன்கிழமை சாயந்தரம் நீ லீவு போட்டுட்டு வீட்ல இருக்கணும். அன்னிக்கு அவங்க உன்னைப் பெண் பார்க்க வர்றாங்க...! அபர்ணா...!"

"என்னங்க...?"

"மாப்பிள்ளை வீட்டுக்காரங்களுக்கு நீயே போன் பண்ணி புதன்கிழமையன்னிக்கு வரச்சொல்லிடு..."

"சரிங்க." அபர்ணா டெலிபோனை நோக்கிப் போக, ராஜாமணி தன் தங்கையை ஏறிட்டான்.

"ஹம்சினி...! கல்யாணம்ங்கிறது காலா காலத்தில நடக்க வேண்டிய ஒரு கட்டாய நிகழ்ச்சி. எந்தக் காரணத்தைச் சொல்லியும் இதைத் தவிர்க்க முடியாது...."

"அண்ணா! கல்யாணம் பண்ணிக்கிறது எனக்கு உடன்பாடான விஷயம்தான். இருந்தாலும் என் மனசுக்குள்ளே ஒரு பயம்"

"என்ன பயம்...?"

"எனக்குக் கணவரா வரப்போகிறவர்க்கு என்னோட சோஷியல் ஆக்டிவிடீஸ் பிடிக்கலைன்னா... என்ன பண்றது...?"

"என்ன பண்றது...? விட்டுட வேண்டியதுதான்! என்ன கேள்வி இது...?" -ராஜாமணி சிரித்தவாறே சொல்லி விட்டுக் குளிக்கக் கிளம்பினார்.

அபர்ணா டெலிபோனில் பேசிக்கொண்டிருந்தாள். "புதன்கிழமை காலை ஒம்பது மணியிலிருந்து பத்து மணிக்குள்ளே வர்றீங்களா...? வாங்க...! எங்களுக்கு எந்தச் சிரமும் இல்லை"

"...."

"மாப்பிள்ளையையும் சேர்த்து மொத்தம் பனிரெண்டு பேரா...? தாராளமா வாங்க ... உங்க உறவுல பொண்ணைப் பார்க்க யார் யார் பிரியப்படறாங்களோ அவங்க எல்லாரையும் கூட்டிட்டு வாங்க..."

காது வரை சிரித்துக் கொண்டு வழிய வழியப் பேசிக்கொண்டிருந்த அண்ணி அபர்ணாவை எரிச்சலாய்ப் பார்த்தாள் ஹம்சினி.

காலை ஒன்பது மணி.

ராஜாமணி பாரீஸ் கார்னரில் ஸ்கூட்டரை நிறுத்த ஹம்சினி இறங்கிக் கொண்டாள். அவளுடைய பஸ் புறப்படும் விநாடிகளில் கியரில் உறுமிக்கொண்டிருந்தது.

"பஸ்ஸுக்குச் சில்லறை இருக்கா?"

"ம்..."

"ஆபீஸுக்குப்போனதும் முதல்காரியமா வர்ற புதன்கிழமை லீவு வேணும்ன்னு கேட்டு ஒரு அப்ளிகேஷன் குடுத்துடு. கடைசி நேரத்தில் போய் லீவு கேட்டா தரமாட்டாங்க..."

"சரி..." ஹம்சினி தலையை ஆட்டிவிட்டு பஸ்ஸை நோக்கிப் போனாள். உதறிக் கொண்டிருந்த பஸ்ஸுக்குள் ஏறி உட்கார்ந்தவள் ராஜாமணி ஸ்கூட்டரைக் கிளப்பிக் கொண்டு போனதும் ஒரு திருட்டுப் பார்வையோடு பஸ்ஸைவிட்டு இறங்கி ரோட்டைக் கடந்து எதிர்ச்சாரியில் இருந்த டெலிபோன்பூத்தை நோக்கிப் போனாள். ஒரு ரூபாய் நாணயத்தைத் தயாராக வைத்துக் கொண்டு ஆபீஸுக்கு டயல் செய்ய, லைன் கிடைத்து ஹெட்கிளார்க் பேசினார்

"ஹலோ"

நாணயத்தை உள்ளே சொருகிவிட்டுத் தொடர்ந்தாள். குரல் குழைந்தது.

"குட்மார்னிங் ஸார்... நான் ஹம்சினி..."

"ஹம்சினியா...! என்னம்மா பர்மிஷன் போடப்போறியா....?"

"இல்ல.... ஸார்...! இன்னிக்கு லீவே வேணும்"

"இந்த மாசத்துல நீ கேக்கிற மூணாவது லீவு இது"

"ஸாரி... ஸார்..."

"ஒரு ரூபாய் செலவுல எங்கேயிருந்தாவது பேசி நீ சிம்பிளா ஸாரி சொல்லி லீவு வாங்கிட்டுப் போயிடுவே. மானேஜர்கிட்டே வாங்கிக் கட்டிக்கிறது நான்தானே...?"

"ஸார்...! நான் காரணம் இல்லாமே லீவு எடுக்கமாட்டேன்.

"சரி... அப்ப... என்ன காரணம்?"

"என்னோட அண்ணிக்கு உடம்பு ரொம்பவும் முடியலை ஸார். வைரஸ் ஃபீவர். அண்ணன் வேற பிசினஸ் விஷயமா ஹைதராபாத் போயிட்டார். எனக்கு என்ன பண்றதுன்னே தெரியலை. ஸார்... ரெண்டு கண்ணையும் கட்டிக் காட்டுல விட்ட மாதிரியிருக்கு. ப்ளீஸ் சார். இந்தத் தடவை மட்டும் லீவ் சாங்ஷன் பண்ணுங்க ஸார்."

"சரி... இன்னிக்கு லீவு எடுத்துக்கோ...! நாளைக்கு மட்டம் போட்டுடாதே...! நீ பார்க்க வேண்டிய வேலை ஆபீஸ்ல ஏகப்பட்ட பெண்டிங்."

"கவலையே படாதீங்க ஸார்...! நாளைக்கு வந்து எல்லா வேலையையும் முடிச்சுக் கொடுத்துடுவேன்..."

ரிஸீவரைக் கொக்கியில் மாட்டிகிட்டு வெளியே வந்தாள் ஹம்சினி. காலியாகப் போகும் ஓர் ஆட்டோவுக்காகக் காத்திருந்து, பின் பிடித்து ஏறி உட்கார்ந்தாள்.

"லோட்டஸ் ஹாஸ்பிடல்..."

"எந்த ஏரியாம்மா...?"

"மயிலாப்பூர்..."

"நாகரத்தினம் வீதியில் இருக்கே...!"

"அதேதான்..."

டிரைவர் மீட்டரைப் போட்டுவிட்டு ஆட்டோவை பீச் ரோட்டில் விரட்டினார். கடல் தொலைவில் நீல நிறத்தில் நீளமாய் அசைய, காற்று வறண்டிருந்தது. வெய்யில் அந்நேரத்துக்கே சுட்டது.

ஆட்டோ இருபது நிமிஷத்தைப் பயணத்தில் கழித்து அந்த அமைதியான நாகரத்தினம் தெருவில் நுழைந்து மரங்கள் மண்டிய லோட்டஸ் ஹாஸ்பிடலுக்கு முன்பாய்ப் போய் நின்றது.

ஹம்சினி இறங்கி மீட்டர் பார்த்துப் பணத்தைக் கொடுத்துவிட்டு வேனிடி பேக்கைத் தோளில் சரியாய் மாட்டிக் கொண்டபின் ஹாஸ்பிடலுக்குள் நுழைந்தாள்.

ரிசப்ஷன் கௌண்ட்டரில் இரண்டு நர்ஸ்கள் நேற்றைக்கு டி.வி.யில் பார்த்த 'மங்கை' சீரியலைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்க ஹம்சினி எதிரில் போய் நின்றாள்.

"டாக்டர்... ராமன் இருக்காரா?"

"இருக்கார்...! நீங்க... பேஷண்ட்டா...?"

"இல்லை... அவரைக் கொஞ்சம் பர்சனலாப் பார்த்து பேசணும்..."

"ஃபர்ஸ்ட் ஃப்ளோர்ல ரெண்டாவது ரூம். சீக்கிரமாப் போங்க. அவர் இப்போ ரவுண்ட்ஸ் கிளம்பற நேரம்"

ஹம்சினி அவர்களுக்கு ஒரு நன்றியைச் சொல்லிவிட்டு வேகவேகமாய் முதல் மாடிக்குப் போனாள்.

ஓடிகோலன் வாசனையோடும் நிசப்தத்தோடும் முதல் மாடி வந்தது. இரண்டாவது அறைக்கு முன்பாய் வந்து நின்றாள். முதலில் டாக்டர் தீர்த்தராமனின் நேம் போர்டு ஏகப்பட்ட மெடிக்கல் டிகிரிகளைச் சுமந்து கொண்டு திணற ஹம்சினி கதவை மெல்லத் தட்டினாள்.

"எஸ்... கம் இன்..." உள்ளேயிருந்து குரல் கேட்கவும், டோர் க்ளோசரைச் சற்று சிரமமாய்த் தள்ளிக் கொண்டு உள்ளே போனாள்.

டாக்டர் தீர்த்தராமன் ஐம்பதுக்கும் அறுபதுக்கும் இடைப்பட்ட ஒரு வயதில் இருந்தார். அடர்த்தி குறைந்த தலைக்கேசத்தை ஜாக்கிரதையாய்ச் சீவி வழுக்கையை மறைத்திருந்தார். தீட்சண்யம் மிக்க கண்களுக்கு ஸ்பெக்ஸ் கொடுத்திருந்தார். சதைப்பிடிப்பான முகம் அன்றைய ஷேவிங்கில் பளபளப்பு ஏறியிருந்தது.

"குட்மார்னிங் டாக்டர்..."

"குட்மார்னிங்..." சொன்ன தீர்த்தராமன் 'என்ன விஷயம்?' என்பது போல் பார்க்க ஹம்சினி தொடர்ந்தாள்.

"டாக்டர்! என்பேர் ஹம்சினி. உங்ககிட்டக் கொஞ்சம் பேசணும்..."

"உட்காரம்மா..." எதிரே இருந்த ஒரு நாற்காலியைக் காட்டி அவள் உட்கார்ந்ததும் கேட்டார்.

"என்ன விஷயம்...?"

ஹம்சினி தன் தோளில் தொங்கிக் கொண்டிருந்த வானிடி பேக்கின் ஜிப்பைப் பிரித்து உள்ளேயிருந்து ஒரு பேப்பர் கட்டிங்கை எடுத்துக் காட்டினாள்.

"டாக்டர்! இந்த விளம்பரத்தைக் கொடுத்தது நீங்கதானே...?"

வாங்கிப் பார்த்தார்.

ஆங்கில நாளிதழில் வந்த விளம்பர வரிகள் அது. "வான்டட். கிட்னி டோனர் வித் பிளட் க்ரூப் பி பாஸிடீவ். காண்டாக்ட் டாக்டர் தீர்த்தராமன். லோட்டஸ் ஹாஸ்பிடல், மயிலாப்பூர்..."

"எஸ்...! நான் கொடுத்த விளம்பரம்தான்"

"நீங்க விளம்பரத்தில கேட்டிருக்கிற கிட்னி டோனர் தற்சமயம் ரெடி. யார்க்குக் கிட்னி தேவைப்படுதுன்னு சொல்ல முடியுமா...."

"ஒரு அம்பது வயசு லேடிக்கு..."

"யார் அவங்க...?"

"பேர் பாகீரதியம்மாள், கோயமுத்தூரைச் சேர்ந்தவங்க"

"வசதி படைச்சவங்களா..."

"ரொம்பவும் வசதி. கணவர் ஒரு இன்டஸ்ட்ரியலிஸ்ட்.

கோயமுத்தூர்ல ஏழெட்டு மில். ரெண்டு தியேட்டர். ஒரு த்ரீ ஸ்டார் ஹோட்டல். ஊட்டியில் எஸ்டேட்ஸ். இப்படி நிறையச் சொல்லிக்கிட்டே போலாம்."

"அப்படின்னா... அந்த அம்மாவுக்கு கிட்னி கொடுத்தா... கிட்னி டோனர் வில் பி ரிவார்டட்...?"

"கண்டிப்பா..."

"எவ்வளவு தருவாங்க...?"

"ரெண்டு லட்சத்திலிருந்து மூணு லட்சம் வரைக்கும்"

"ரெண்டு லட்சம் உறுதியா கிடைக்கும்?"

"கண்டிப்பா! கிட்னி டோனர் யாரு? கூட்டிட்டு வந்திருக்கியா...?"

"அந்த கிட்னி டோனரே நான்தான் டாக்டர்"

தீர்த்தராமன் முகம் பூராவும் அதிர்ச்சியைப் பரவ விட்டபடி கண்ணாடியைக் கழற்றினார்.

"கிட்னி நீ கொடுக்கப் போறியா?"

"ஆமா டாக்டர்..."

"சின்ன வயசுப் பொண்ணாயிருக்கியேம்மா. உனக்கு இன்னும் கல்யாணம் கூட ஆகலை போலிருக்கே....?"

"ஆகலை... டாக்டர்..."

"நீ கிட்னி கொடுக்கிறதுக்கு உன்னோட வீட்ல இருக்கிறவங்க ஒத்துக்க மாட்டாங்களே....?"

"எனக்கு யாரும் கிடையாது டாக்டர். அப்பா அம்மா எப்பவோ இறந்துட்டாங்க. கூடப் பொறந்தவங்களும் யாரும் கிடையாது. அட் ப்ரஸண்ட் நான் ஒரு இண்டிபென்டென்ட் பர்ஸன். நான் எது

செஞ்சாலும் என்னை ஏன்னு கேட்க ஆள் கிடையாது."

"உன்னோட பணத் தேவைக்காகத்தான் நீ இப்போ கிட்னி விக்கப் போறே...?"

"ஆமா டாக்டர்..! எனக்கு ரெண்டு லட்ச ரூபாய் அவசரமாத் தேவைப்படுது. ஆனா நான் கிட்னி கொடுக்கப் போகிற விஷயம் உங்களைத் தவிர வேற யார்க்கும் தெரியக் கூடாது. இந்த டீலிங் நம்ம ரெண்டு பேர்க்குள்ளே மட்டுந்தான் இருக்கணும்..."

அழுத்தம் திருத்தமாய் நிபந்தனைகளைப் போடும் ஹம்சினியையே இமைக்காமல் பார்த்தார் தீர்த்தராமன்.

# 2

சில விநாடிகள் வரைக்கும் ஹம்சினியையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த டாக்டர் தீர்த்த ராமன் பின் மெல்லிய குரலில் கேட்டார்.

"நீ எங்கே தங்கியிருக்கேம்மா...?"

"ஸாரி டாக்டர்...! என்னைப் பத்தி இது வரைக்கும் நான் சொன்ன தகவல்களே போதும். மேற்கொண்டு எதையும் கேக்காதீங்க. உங்களுக்கு வேண்டியது கிட்னி. அதைக் கொடுக்க நான் தயாராயிருக்கேன். என்னோட ஹெல்த்தைப் பத்தி உங்களுக்குச் சந்தேகம் இருந்தா டெஸ்ட் பண்ணிப் பார்த்துக்கலாம்."

டாக்டர் தீர்த்தராமன் கையமர்த்தினார்.

"கொஞ்சம் பொறும்மா...! கிட்னியை டொனேட் பண்றது சாதாரண விஷயம் கிடையாது. இதுல நிறைய ஃபார்மாலிடீஸ் இருக்கு. நான் ஒரு டாக்டர்ங்கிற முறையில் அதையெல்லாம் ஃபாலோ பண்ண வேண்டியிருக்கு... பின்னாடி பிரச்னைன்னு ஒண்ணு வந்துட்டா ஹாஸ்பிட்டலோட பேர் கெட்டுப் போயிடும்..."

ஹம்சினி தன் தோள்பட்டைகளை அலட்சியமாய்க் குலுக்கினாள்.

"டாக்டர்! நான் ஒண்டிக்கட்டை. யார் தயவிலும் நான் இல்லை. பின்னாடி எந்தப் பிரச்னையும் வர உங்களுக்கு வாய்ப்பு இல்லை."

தீர்த்தராமன் மேற்கொண்டு பேசும் முன்பு அவர்க்கு முன்பாய் இருந்த இண்ட்டர்காம் 'முணுமுணு'வென்று கூப்பிட்டது. ரிஸீவரை எடுத்துக் காதோடு உரச விட்டார்.

மறுமுனையில் ஹாஸ்பிடலின் ரிசப்ஷனிஸ்ட் பேசினாள்.

"டாக்டர்...! மிஸ்டர் சரண் உங்களைப் பார்த்துப் பேசறதுக்காக வெயிட் பண்ணிட்டிருக்கார். அனுப்பி வைக்கலாமா...."

"ம்... அனுப்பு."

தீர்த்தராமன் ரிஸீவரை வைத்துவிட்டு ஹம்சினியை ஏறிட்டார்.

"இன்னும் ஒரு நிமிஷத்துல என்னைப் பார்த்துப் பேசறதுக்காக சரண்ன்னு ஒருத்தர் வருவார். அவர் வேறு யாரும் கிடையாது. நீ கிட்னி கொடுக்கப் போகிற பாகீரதியம்மாளின் மகன். உன்னை அந்தச் சரணுக்கு அறிமுகப்படுத்தி வைக்கட்டுமா...?"

"வேண்டாம் டாக்டர். நான்தான் கிட்னிடோனர்ன்னு உங்களைத் தவிர வேற யார்க்கும் தெரியக் கூடாது. நான் வேணும்ன்னா வெளியே போயிடறேன்."

"நோ... நோ...! நீ வெளியே போக வேண்டாம். உட்கார். என் ஃப்ரண்டோட டாட்டர்ன்னு சரண்கிட்ட நான் சொல்லிக்கறேன்."

டாக்டர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அறைக்கதவு தட்டப்பட்டது.

"ப்ளீஸ்... கெட் இன்..."

அந்த சரண் உள்ளே வந்தான். பாலீஷ் செய்யப்பட்ட கோதுமை நிறம். அடர்த்தியான நீல நிற சஃபாரியில் தன் ஆறடி உயர உடம்பை நுழைத்திருந்தான்.

"குட் மார்னிங்... டாக்டர்!"

"குட்மார்னிங்... வா சரண்...!"

சரண் பக்கத்து நாற்காலியில் உட்கார்ந்திருந்த ஹம்சினியைத் தயக்கப் பார்வை பார்த்துக் கொண்டே 'பிவிசி'க்கு சாய்ந்தான்.

தீர்த்தராமன் சொன்னார். "சரண்...! ஷி ஈஸ் ஹம்சினி. என் ஃப்ரண்டோட டாட்டர்..."

சரணும் ஹம்சினியும் தத்தம் பார்வைகளை மோதவிட்டபடி பரஸ்பரம் 'ஹலோ' சொல்லிக் கொண்ட பின் சரண் கவலை முகமாய் தீர்த்தராமனிடம் திரும்பினான்.

"டாக்டர்..."

"என்ன சரண்...?"

"ராத்திரி பூராவும் அம்மா தூங்கலையாம்..."

"எஸ்... அம்மாகிட்ட பேசிட்டுத்தான் வந்தேன். கொஞ்சம் ரெஸ்ட்லஸ்ஸா இருக்காங்க... மெடிசனை சேஞ்ச் பண்ணியிருக்கேன்..."

"டாக்டர்...! பேப்பர் விளம்பரத்துக்கு ஏதாவது ரெஸ்பான்ஸ் கிடைச்சிருக்கா..."

தீர்த்தராமன் சில விநாடிகள் தயங்கிவிட்டு தலையாட்டினார்.

"ஸாரி... சரண்...! இந்த நிமிஷம் வரைக்கும் நாம பேப்பர்ல கொடுத்து இருந்த விளம்பரத்துக்கு எந்த ரெஸ்பான்ஸும் கிடைக்கலை. பட் வேற ஒரு வகையில உன்னோட மதர்க்குப் பொருத்த வேண்டிய கிட்னிக்கு ஏற்பாடு பண்ணிட்டேன்."

சரண் நாற்காலியை விட்டு குபீரென்று எழுந்து தீர்த்தராமனின் கைகளைப் பற்றிக் கொண்டான்.

"டாக்டர்...! யார் அந்த கிட்னி டோனர்...?

டாக்டர் புன்னகைத்தார்.

"டோனர் தன்னை வெளிப்படுத்திக்க விரும்பலை."

"காரணம்?"

"தெரியலை!"

"ஆணா... பெண்ணா...?"

"ஸாரி... சரண்...! அந்த டோனரைப் பத்தி எதுவுமே சொல்லக் கூடாதுங்கிறது எங்களுக்குள்ளே நாங்க போட்டுகிட்ட ஒரு ஜென்டில்மேன் அக்ரிமெண்ட்."

"ஓ... கே... டாக்டர்... எப்படியோ அம்மாவுக்கு கிட்னி கிடைச்சா சரி...! ஆப்ரேஷன் எப்போ டாக்டர்..."

"இனிமேதான் டேட் ஃபிக்ஸ் பண்ணணும்..."

"தொகை பேசிட்டீங்களா...?"

"ரெண்டு லட்சம் சொல்லியிருக்கேன்."

"மூணு லட்சமாவே குடுத்துடலாம் டாக்டர். அதுக்கும் மேலே டிமாண்ட் பண்ணினாலும் குடுத்துடுங்க. பணம் ஒரு பிரச்னையே கிடையாது டாக்டர்."

"எனக்குத் தெரியாதா என்ன...?"

"டோனர் கடைசி நேரத்துல மாட்டேன்னு சொல்லிடப் போறார் டாக்டர்..."

"அந்தக் கவலையே உனக்கு வேண்டாம்... டோனர் அப்படிப் பட்ட ரகம் கிடையாது."

"அப்பாகிட்ட விஷயத்தைச் சொல்லிட்டீங்களா?"

"இன்னும் இல்லை... பத்து நிமிஷத்துக்கு முந்திதான் இந்த மேட்டர் எனக்கே கன்ஃபார்ம் ஆச்சு..."

"அப்பாகிட்டச் சொல்லிட்டு வந்துடறேன் டாக்டர். காலையில்

இருந்தே அவர் ரொம்பவும் டென்ஷன்..." சொன்ன சாண்தீர்த்த ராமன் கூப்பிட்டதையும் பொருட்படுத்தாமல் வேகவேகமாய் வெளியேறினான்.

ஹம்சினி டாக்டரை ஏறிட்டுப் புன்னகைத்தாள்.

"அம்மா மேல ரொம்பவும் பாசம் போலிருக்கு."

"எக்கச்சக்கம்...! அந்த அம்மாவும் அப்படித்தான். தூங்கற நேரம் தவிர மத்த நேரமெல்லாம் அந்த அம்மா வாயில சரண் நாமாவளி தான். பையனுக்கு ஒரு கல்யாணத்தைப் பண்ணி பேரன் பேத்தியைப் பார்க்கணும்ன்னு கொள்ளை ஆசை. இந்த ஆசையில் மண்ணை அள்ளி கொட்டிடிச்சு இந்த கிட்னி ஃபெய்லியர். மாற்றுச் சிறுநீரகம் பொருத்தினால் ஒரு அஞ்சு வருஷம் போனஸா உயிர் வாழலாம். அந்த அஞ்சு வருஷத்துக்குள்ளே சரண் ஒரு கல்யாணம் பண்ணிப் பேரன் பேத்தியை எடுத்துக் கொடுத்து அம்மாவை சந்தோஷப்படுத்தியாகணும்....

"டாக்டர்! என்னோட கிட்னி ஒரு பாசமுள்ள அம்மாவுக்குள்ளே இயங்கப் போறதை நினைச்சு நான் ரொம்பவும் சந்தோஷப்படறேன். ஆபரேஷன் நடக்கும் போது நான் எத்தனை நாள் ஹாஸ்பிடல்ல இருக்க வேண்டியிருக்கும் டாக்டர்?"

"கிட்னி கொடுத்த டோனர் ஒரு அஞ்சு நாளாவது ஹாஸ்பிடல்ல இருக்கணும்."

'அஞ்சு நாளா?' ஹம்சினிக்குள் ஒரு மலைப்பு தட்டியது.

'அண்ணனிடமும் அண்ணியிடமும் என்ன காரணத்தைச் சொல்லிவிட்டு நான் வெளியே வருவது?'

"என்ன யோசிக்கிறேம்மா...?"

"ஒண்ணும் இல்லை டாக்டர்..."

"உன்னோட யோசனை பணத்தைப் பத்திதானே! அதைப்பத்தின கவலையே உனக்கு வேண்டாம். நீ கேட்டது ரெண்டு லட்சம். சரண்கிட்ட பேசி உனக்கு மூணு லட்சமாவே வாங்கித் தாறேன்."

ஹம்சினி புன்னகைத்தாள்.

"எனக்கு ரெண்டு லட்சமே போதும் டாக்டர்."

தீர்த்தராமன் புருவங்களை உயர்த்தினார். "ஏம்மா! அதிகமாகக் கிடைக்கிற பணத்தை வேண்டாம்ன்னு சொல்றே...?"

"எனக்குத் தேவையானது ரெண்டு லட்சம்தான் டாக்டர்... அதுக்கு மேல எனக்கு ஒரு ரூபாய் கூட வேண்டாம்..."

"என்னம்மா இது? உன்னோட பேச்சு நடவடிக்கைகள்

எல்லாமே வித்தியாசமா இருக்கு..."

"எஸ்... டாக்டர்...! நான் கொஞ்சம் வித்தியாசமானவள்தான். எனக்கு இங்கே ஏதாவது செக்கப் உண்டா?"

"கண்டிப்பா...! உன்னோட ப்ளட் க்ரூப் பி பாஸிடீவ்தானே...?"

"ஆமா..."

"தென்... நோ ப்ராப்ளம்.... சின்னதா ஒரு Tissue டெஸ்ட் மாத்திரம் பண்ணிப் பார்த்துட்டா போதும்." சொன்னவர் நாற்காலியை பின்னுக்குத் தள்ளி எழுந்து கொண்டார்.

"வாம்மா! லேபுக்கு போலாம்."

ஒரு மணி நேரத்திற்குப் பிறகு லேபை விட்டு வெளியே வந்தார்கள், டாக்டர் தீர்த்தராமனும் ஹம்சினியும்.

டாக்டரின் முகப்பரப்பில் சந்தோஷ வெளிச்சம்.

ஹம்சினி...! பாகீரதியம்மாவுக்குப் பொருத்தமான கிட்னி டோனர் நீதான். லேப்டெஸ்ட் ரிப்போர்ட்டின் எல்லா ஆஸ்பெக்ட்ஸும் க்ரீன் சிக்னல் கொடுத்திருக்கு. இப்படியொரு ஃபிட்னஸ் கிடைக்கிறது ரொம்பவும் ரேர்."

"எல்லாமே காட்ஸ் க்ரேஸ்...! ஆபரேஷன் என்னிக்கு டாக்டர்...?"

"வர்ற தர்ஸ்டே!"

ஹம்சினியின் மனசுக்குள் எண்ணம் ஓடியது.

'வர்ற புதன்கிழமை பெண் பாக்க வரப்போறாங்க! அண்ணி அபர்ணா சொன்னது நினைவில் தட்டியது.

டாக்டர் கேட்டார்.

"என்னம்மா... வியாழக்கிழமை உனக்கு சௌகரியமான நாள்தானே..?"

"ம்..."

"அப்புறம்... என்ன தயக்கம்..?"

"ஒரு தயக்கமும் இல்லை டாக்டர்... வியாழக்கிழமை எத்தனை மணிக்கு இங்கே வரணும்..?"

"காலையில பத்து மணிக்கு நீ என் முன்னால இருக்கணும்"

"இருப்பேன்..."

"உன்னோட அட்ரஸ்..?"

"ஸாரி டாக்டர்... என்னைப் பத்தி எதுவுமே நான் சொல்ல விரும்பலை..."

"என்னம்மா இது...! உன்னைப் பத்திய எந்த ஒரு தகவலையும்

சொல்லாமே நீ பாட்டுக்குப் போய்ட்டா.. நான் எந்த நம்பிக்கையில் உன்னை நம்பி ஆபரேஷனுக்கு வேண்டிய ஏற்பாடுகளைப் பண்றது..? ஒரு வேளை நீ வராமே இருந்துட்டா..."

"கண்டிப்பா வருவேன் டாக்டர்.."

"என்ன உத்தரவாதம்..? இந்த நிமிஷம் எனக்கு உன்னோட பேர் மட்டும்தான் தெரியும். அட்ரஸ் தெரியாது. டெலிபோன் நெம்பர் தெரியாது. நீ வரலைன்னா உன்னை எப்படிக் காண்டாக்ட் பண்றது..?"

"என்னை நம்பலாம் டாக்டர்.."

"எப்படி...? வாட் வே..?"

"டாக்டர்! வியாழக்கிழமை காலையில் ஆறு மணிக்கு சூரியன் உதிக்கிறது எவ்வளவு நிச்சயமோ.. அதே மாதிரி அன்னிக்குக் காலையில் பத்து மணிக்கு உங்க முன்னாடி நான் நிக்கிறதும் நிச்சயம். நீங்க ஹென்ட் பர்செண்ட் என்னை நம்பி ஆப்ரேஷனுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலாம்.."

"அதுக்கில்லேம்மா... நான் என்ன சொல்ல வர்றேன்னா..."

"ஸாரி டாக்டர்.. நான் இவ்வளவு தூரம் சொன்ன பின்னாடியும் உங்களுக்கு எம்பேர்ல நம்பிக்கை வரலைன்னா அயாம் ஹெல்ப்லஸ்.."

"ஓ...கே..! உன்னை நம்பறேம்மா..! பட் ஒரு சின்ன ரெக்வெஸ்ட்.."

"என்ன டாக்டர்..?"

"வியாழக்கிழமை வரைக்கும் டெய்லி ஒரு தடவையாவது என்னை நீ டெலிபோன்ல காண்டாக்ட் பண்ணி பேசணும்.."

"ஷ்யூர்.."

"இந்தா.. என் கார்டு.. இதுல என் வீட்டு போன் நெம்பரும் இருக்கு.."

கார்டை வாங்கி ஹேண்ட் பேக்குக்குள் போட்டுக் கொண்ட ஹம்சினி தீர்த்தராமனை ஏறிட்டாள்.

"நான் கிளம்பட்டுமா டாக்டர்.."

"போய்ட்டு வாம்மா.. நாளைக்குக் காலையில் உன்னோட போனை எதிர்பார்க்கலாமா..?"

"ஷ்யூர்ட் டாக்டர்.." ஹம்சினி சிரித்துக்கொண்டே டாக்டரிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு ஹாஸ்பிடலினின்றும் வெளிப்பட்டாள்.

நிழல் மண்டிய ப்ளாட்பாரத்தில் நடந்து ஒரு எஸ்.டி.டி. பூத்தைக் கண்டுபிடித்து உள்ளே நுழைந்தாள். கண்ணாடிக் கதவைச் சாத்திக் கொண்டு டெலிபோனைத் தொட்டு ரிஸீவரை காதுக்கு கொடுத்து டயலில் எண்ணைத் தட்டினாள்.

மறுமுனையில் ரிங் போய் ரிஸீவர் எடுக்கப்பட்டது. ''ஹலோ...'' ஒரு பெண்ணின் குரல்.

ஹம்சினி கேட்டாள்.

''யுனைடெட் ஊனமுற்றோர் பள்ளியா..?''

''ஆமா..''

''கரஸ்பாண்டென்ட் ராதாகிருஷ்ணன் இருக்காரா?''

''இருக்கார்..! நீங்க?''

''ஹம்சினின்னு சொல்லுங்க..''

சில விநாடி அமைதிக்குப் பின் ஆண்குரல் கேட்டது.

''வணக்கம் ஹம்சினி... நான் ராதாகிருஷ்ணன்...''

''ஸ்கூல் எப்படிப் போயிட்டிருக்கு ராதாகிருஷ்ணன்?''

''ஃபைன்..''

''நான் இப்போ போன் பண்ணினதே உங்ககிட்ட ஒரு சந்தோஷமான செய்தியைச் சொல்லத்தான்...''

''சொல்லுங்க ஹம்சினி...''

''சிதிலமாயிருக்கிற ரெண்டு க்ளாஸ் ரூம்ஸை இடிச்சுட்டு இனிமே புதுசா கட்டிக்கலாம்.''

''பணம்..''

''ஏற்பாடு பண்ணிட்டேன்.''

''ரெண்டு லட்சம் வரை செலவாகுமே..''

''நோ.. ப்ராப்ளம்... ராதாகிருஷ்ணன்.. அடுத்த வாரத்திலிருந்து வேலையை ஆரம்பிச்சுடலாம். ரெண்டே மாசத்துல கட்டி முடிச்சுடலாம்..கட்டிடம் எப்போ இடிஞ்சு விழுமோ என்கிற பயமே இல்லாமே குழந்தைங்க ஆர்.ஸி. ரூஃபுக்கு கீழே உட்கார்ந்து படிக்கலாம்..''

''ஹம்சினி..! அவ்வளவு பெரிய தொகை... எப்படி? யாராவது.. டொனேட் பண்றாங்களா?''

''அந்தக் கவலையெல்லாம் உங்களுக்கு வேண்டாம். அடுத்த வாரம் நான் பணத்தோடு வர்றேன். என்ஜினியர் கிட்டப் பேசி வையுங்க...''

''ஹம்சினி.... உங்களுக்கு எப்படி நன்றி சொல்ல..''

"அதையெல்லாம் சாவகாசமாச் சொல்லிக்கலாம்.."

ஹம்சினி ரிஸீவரை வைத்துவிட்டு பூத்தில் இருந்த இளைஞனுக்குப் பணத்தைக் கொடுத்துவிட்டு வெளியே வந்தாள்.

'ப்ளட் டோனர்ஸ் அஸ்ஸோசியேஷனுக்கு போய் பிரஸிடெண்ட்டை பார்க்கவேண்டும்..'

'பஸ்பிடித்து போய்விடலாமா? இல்லை ஆட்டோவை அமர்த்திக் கொள்ளலாமா?'

யோசித்த விநாடி -

அவளுக்கு மிக அருகே அந்தக் குரல் கேட்டது.

"எக்ஸ்க்யூஸ் மீ..'

ஹம்சினி திரும்பினாள்.

டை கட்டிய அந்த அழகான இளைஞன் பார்வைக்குக் கிடைத்தான். கையில் ப்ரீப் கேஸ்.

புன்னகையோடு கேட்டான்.

"நீங்க ஹம்சினிதானே?"

"ஆமா...! நீங்க...?"

"நான் பரணிகுமார்.."

"பரணிகுமார்?"

"எஸ்.."

"ஸாரி.. நீங்க யார்ன்னு தெரியலையே?"

"நான் யார்ன்னு சொன்னா நீங்க வெட்கப்படுவீங்க. சொல்லட்டுமா?"

ஹம்சினி குழப்பமாய் "சொல்லுங்க" என்றாள்.

"வர்ற புதன்கிழமை நான்தான் உங்களை பெண் பார்க்க வரப் போறேன்.."

"......."

# 3

ஹம்சினியின் இருதயத் துடிப்பு உச்சத்துக்குப் போய் அதே விநாடியில் நெற்றி ஒரு அவசர வியர்வைக்கு உட்பட்டது.

பரணிகுமார் தன் உதட்டுக்குச் சின்னதாய் புன்னகையொன்றைக் கொடுத்துக் கொண்டே கண் சிமிட்டினான்.

"இப்படியொரு சந்திப்பை நீங்க எதிர்பார்க்கலை. இல்லையா?"

"ஆ...ஆமா.." ஹம்சினி சொல்லிக் கொண்டிருக்கும்போதே

பின்னங்கழுத்தில் வியர்வைக்கோடு ஒன்று ஸ்லோமோஷனில் இறங்கியது. பரணிகுமார் அவளுடைய அவஸ்தையைப் புரிந்து கொள்ளாமல் கேட்டான்.

"யாருக்காவது உடம்பு முடியலையா?"

"இல்லையே...!"

"பின்னே.. ஹாஸ்பிட்டல்லயிருந்து வந்தீங்க...?"

"அது.. வந்து..வந்து.. என்னோட ஃபிரண்ட் ஒருத்தி அந்த ஹாஸ்பிட்டல்ல ஸ்டாஃப் நர்ஸா இருக்கா. அவளைப் பார்க்கிறதுக் காக வந்தேன்."

பரணிகுமார் புன்னகைத்தான்.

"என்னைப் பார்த்ததும் இப்படி ஒரேடியா நெர்வஸ் ஆயிட்டீங் களே, ப்ளீஸ்... பி... கம்பர்டபிள்..."

ஹம்சினி கையில் வைத்திருந்த கர்ச்சீப்பால் நெற்றி வியர்வையை ஒற்றிக் கொண்டு புன்னகைத்தாள்.

"நா.. நான் வரட்டுமா...?"

"இஃப் யூ டோண்ட் மைண்ட்... உங்ககிட்ட நான் ஒரு கோரிக்கை வைக்கலாமா..?"

"எ..என்ன..?"

"அந்த ரெஸ்டாரெண்ட்டுக்குப் போய் ஒரு கூல்ட்ரிங் சாப்பிடலாமா..?"

"அ...து.. வந்து.."

"உங்களுக்கு இஷ்டமில்லேன்னா வேண்டாம்...! இது ஒரு அப்ளிகேஷன்தான். கட்டாயம் கிடையாது. நீங்க 'நோ'ன்னு சொல் லிட்டா அதுக்காக வருத்தப்படவும் மாட்டேன். பத்து நிமிஷத்தைச் செலவழிச்சு என்கூட உட்கார்ந்து கூல்ட்ரிங் சாப்பிட்டா எனக்கு ஒரு சின்னச் சந்தோஷம் கிடைக்கும். அவ்வளவுதான்."

ஹம்சினி யோசித்து.. "சரி... வாங்க போகலாம்.." என்று மெல்லிய குரலில் சொல்ல பரணிகுமார் தோள்களைக் குலுக்கி "தாங்க் யூ..." என்றான்.

இருவரும் ரோட்டைக் கடந்து எதிரே இருந்த மேஃப்ளவர் ரெஸ்டாரெண்ட்டுக்குள் நுழைந்தார்கள். ஃபாஸ்ட் ஃபுட் ரெஸ்ட்டாரண்டில் வெஜிடபிள் போண்டாவும் பாவ் பஜ்ஜியும் புயல் வேகத்தில் விற்பனையாகிக் கொண்டிருந்தன. கொதித்துக் கொண்டிருந்த எண்ணெய் வாணலியில் நேந்திரம் சிப்ஸ் பொன்னிறமாய் வறுபட்டுக் கொண்டிருந்தது.

பரணிகுமாரும் ஹம்சினியும் எதிரெதிர் நாற்காலிகளில் உட்கார்ந்தார்கள்.

"கூல்ட்ரிங்க்ஸ் எது சொல்லட்டும்?"

"எதுவானாலும் பரவாயில்லை.."

"கோலா..?'

"ம்..."

பக்கத்தில் வந்து நின்ற பேரரிடம் இரண்டு கோலா ஆர்டர் கொடுத்துவிட்டு ஹம்சினியைப் பார்த்தான் பரணிகுமார். அவள் தலை குனிந்து மேஜை முனையை இடது கையின் ஆட்காட்டி விரலால் கீறிக் கொண்டிருந்தாள்.

"ஹம்சினி..'

"ம்.."

"ஏதாவது பேசுங்களேன்.."

"என்ன பேசறதுன்னு தெரியலை.. அப்படி ஏதாவது பேச ஆரம்பிச்சா என் மனசுக்குள்ளே இருக்கிறது வெளியே வந்துருமோன்னு பயமாயிருக்கு.."

பரணிகுமாரின் புருவங்கள் ஒரு மில்லி மீட்டர் உயரத்துக்கு எழும்பின.

"என்ன சொன்னீங்க...? மனசுக்குள்ளே இருக்கிறது வெளியே வந்துருமா..?"

"ம்.."

"வரட்டுமே..! மோஸ்ட் வெல்கம்."

ஹம்சினி நிமிர்ந்தாள். வார்த்தைகளை நிறுத்தி நிதானமாகப் பேசினாள். "நீங்க என்னைப் பெண் பார்க்க வர்றதுக்கு முன்னாடி நானே உங்க ஆபிஸுக்கு வந்து உங்களைப் பார்த்துப் பேசணும்ன்னு நினைச்சிட்டிருந்தேன்."

"இஸிட்..?"

"எஸ்..."

"என்ன விஷயமா என்னைப் பார்க்க வர்றதா இருந்தீங்க?"

"எனக்குக் கல்யாணம் பண்ணிக்க இஷ்டம் இல்லேன்னு சொல்லத்தான்..."

பரணிகுமாரின் கண்களில் அதிர்ச்சி பரவியது. "கல்யாணம் பண்ணிக்க இஷ்டமில்லையா.. ஏன்..? என்னை உங்களுக்குப் பிடிக்கலையா..?"

"எனக்குக் கல்யாணமே பிடிக்கலை.."

இரண்டு பாட்டில்களில் கோகோ கோலா வியர்த்த உடம்புகளோடு வந்தது. பேரர்போனதும் பரணிகுமார் கேட்டான்.

''உங்களுக்கு ஏன் கல்யாணம் பிடிக்கலை..?''

ஹம்சினி புன்னகைத்தாள். ''சிலருக்கு உப்புமாப் பிடிக்காது. காரணம் கேட்டா அவர்களால் பதில் சொல்ல முடியாது. அது மாதிரிதான் இதுவும்.''

''கல்யாணங்கிறது ஒரு பொண்ணுக்கு அத்யாவசியத் தேவை உங்களை யாரோ மென்டலி டிஸ்டர்ப் பண்ணியிருக்காங்கன்னு நினைக்கிறேன்.''

''அப்படியெல்லாம் எதுவும் இல்லை. இது நானாக எடுத்த முடிவு...''

''அப்படீன்னா வர்ற புதன்கிழமையன்னிக்கு உங்களைப் பெண் பார்க்க வரவேண்டாம்ன்னா சொல்றீங்க?''

''ஆமா...''

''மீறிப் பெண் பார்க்க வந்தா என்ன செய்வீங்க..?'' கேட்டுவிட்டு ஒரு குறும்புச் சிரிப்போடு கண் சிமிட்டினான் பரணிகுமார்.

ஹம்சினி திடுக்கிட்டுப் போய் அவனைப் பார்த்தாள். ''நான் இவ்வளவு சொன்ன பின்னாடியும் நீங்க என்னைப் பெண் பார்க்க வருவீங்கன்னு நினைக்கலை.''

''கல்யாணம் வேண்டாம்ங்கிற விஷயத்தை உங்க வீட்ல சொன்னீங்களா.?''

''சொன்னேன்! அண்ணனும் சரி அண்ணியும் சரி... என்னோட மறுப்பை ஒரு பொருட்டாவே எடுத்துக்கலை.. அவங்க பாட்டுக்கு வரன் பார்த்துகிட்டே இருக்காங்க...''

''இதுவரைக்கும் உங்களை யாராவது பெண் பார்க்க வந்திருக்காங்களா..?''

''யாரும் கிடையாது...'

''அப்படீன்னா நான்தான் உங்க வீட்டுக்கு பெண் பார்க்க வர இருந்த முதல் வரன் இல்லையா..?''

''ஆமா..''

பரணிகுமார் ஒரு கோலா பாட்டிலைக் கையில் எடுத்துக் கொண்டு ஸ்ட்ராவை உதட்டுக்குக் கொடுத்து உறிஞ்சி விட்டு ஹம்சினியை ஏறிட்டான்.

''வர்ற புதன்கிழமை நான் உங்களைப் பெண் பார்க்க வரமாட்டேன். என்னை நீங்க நம்பலாம். ஆனா இன்னும் கொஞ்ச

நாள் கழிச்சு வேற ஒரு வரன் உங்களைப் பெண் பார்க்க வந்தா என்ன பண்ணுவீங்க...?"

"இந்த வரனையும் சந்திச்சு இது மாதிரி ஒரு அப்ளிகேஷன் போட வேண்டியதுதான்..."

"இது என்னிக்குமே நடந்துட்டு வரும்ன்னு நினைக்கிறீங்களா..? எல்லாருமே என்னை மாதிரி இருக்கமாட்டாங்க..."

"பார்க்கலாம். எனக்குக் கொஞ்சம் அதிர்ஷ்டம் இருக்கு.. இல்லேன்னா உங்களை இன்னிக்குப் பார்த்திருக்க மாட்டேன்.. என்னோட கல்யாணத்தை எங்கே 'செக்' வெச்சு எப்படி நிறுத்தணும்ன்னு எனக்குத் தெரியும்."

"கல்யாண புரோக்கர் உங்க போட்டோவைக் கொண்டு வந்து காட்டின அன்னிக்கு ராத்திரி கனவுல உங்க கூடச் சேர்ந்து டூயட் பாடிட்டேன்! ஸாரி..."

ஹம்சினி புன்னகைத்தாள். "என்னைக் காட்டிலும் ஒரு நல்ல பெண் உங்களுக்கு மனைவியா வருவா. விஷ் யூ ஏ ஹெப்பி மேரீட் லைஃப்...! போலாமா...?"

கோலா பாட்டில்களைக் காலியாக்கிவிட்டு இருவரும் எழுந்தார்கள். வெளியே வந்ததும் பரணிகுமார் கேட்டான். "இன்னிக்கு நீங்க ஆபீஸுக்குப் போகலையா?"

"இல்லை. கொஞ்சம் பர்சனல் வொர்க் இருந்தது. லீவு போட்டுட்டேன். நான் லீவு போட்டது வீட்டுக்குக் கூடத் தெரியாது."

"நான் பார்த்த பெண்களிலேயே நீங்க கொஞ்சம் வித்தியாசமா இருக்கீங்க.."

"இதுதான் ஹம்சினி.."

மேலும் ஒரு பத்து நிமிஷம் பரணிகுமாரிடம் பேசிக் கொண்டிருந்துவிட்டு, விடைபெற்ற பின் ஆட்டோ ஒன்றைப் பிடித்து ஏறி உட்கார்ந்தாள் ஹம்சினி.

டிரைவர் கேட்டான்.

"எங்கேம்மா போகணும்...?"

"ரக்ட்சா முதியோர் இல்லம்."

ஆட்டோ கிளம்பியது. போக்குவரத்தில் கலந்து அரைமணி நேரத்தைக் கரைத்தபின் ஆட்டோ, ரக்ட்சாவின் பிரதான வாயிலில் நுழைந்து அந்தச் சிறிய கட்டிடத்துக்கு முன்பாய்ப் போய் நின்றது.

இறங்கிக்கொண்டு மீட்டர் பார்த்துப் பணத்தைக் கொடுத்த ஹம்சினி கட்டிடத்துக்குள்ளே போனாள்.

முன்னறையிலேயே இருந்த இல்ல நிர்வாகி சாவித்திரியம்மாள் ஹம்சினியைப் பார்த்ததும் மலர்ந்தாள்.

"வாம்மா... ஹம்சினி...! இப்பத்தான் உன்னை நினைச்சேன். நீயே வந்துட்டே"

"ஸாரி... கொஞ்சம் லேட்டாயிடுச்சு.."

"இதுக்குப்போய் ஸாரி சொல்லணுமா என்ன? உட்கார் ஹம்சினி..!"

ஹம்சினி உட்கார்ந்து கொண்டே கேட்டாள். "தெய்வநாயகி அம்மாவுக்கு இப்போ முதுகுத் தண்டுவட வலி எப்படியிருக்கு..?"

"சும்மா சொல்லக்கூடாது ஹம்சினி. நேத்து சாயந்தரம் நீ இங்கே வந்து அந்த அம்மாவுக்குக் கொடுத்த 'ரெய்க்கி' ட்ரீட்மெண்ட் ரொம்பவும் அற்புதம். எத்தனையோ மருந்து மாத்திரைகள் சாப்பிட்டும் கிடைக்காத ஒரு குணம் நீ கொடுத்த ரெய்க்கி ட்ரீட்மெண்ட் மூலமாக் கிடைச்சிருக்கு. நேத்து ராத்திரி அந்த அம்மா நிம்மதியாத் தூங்கினாங்க."

"இது போதும்.."

"இனிமே இங்கே நீ அடிக்கடி வர வேண்டியிருக்கும் ஹம்சினி. ஏன்னா இந்த இல்லத்தில் இருக்கிற மத்த வயசானவங்களும் உங்கிட்ட ரெய்க்கி ட்ரீட்மெண்ட் எடுத்துக்க விரும்பறாங்க. இதனால மருந்து மாத்திரைச் செலவு எங்களுக்கும் குறையும்."

"இனிமே ஆபீஸ் முடிந்ததும் சாயந்திரம் ஆறு மணிக்கெல்லாம் இங்கே வந்துடறேன். ஒரு மணி நேரம் இருந்து ட்ரீட்மெண்ட் கொடுத்துட்டு போறேன்..."

"எங்களுக்கு இந்த உதவி போதும்மா...!" சாவித்திரியம்மாள் நெகிழ்ச்சியோடு ஹம்சினியின் கைகளைப் பற்றிக்கொள்ள ஹம்சினி எழுந்தாள்.

"வாங்க... தெய்வநாயகி அம்மாவைப் பார்க்கலாம்..."

சாயந்திரம் ஆறு மணிக்கு மேல் ஹம்சினி வீடு திரும்பியபோது வீட்டில் பாலைவன நிசப்தம்.

அண்ணன் ராஜாமணி இன்னமும் ஆபீஸிலிருந்து திரும்ப வில்லை என்பதற்கு அடையாளமாய் ஸ்கூட்டர் நிறுத்தும் இடம் காலியாக இருந்தது. வழக்கமாய் ஓடிக் கொண்டிருக்கும் டிவி

மௌனமாய் இருந்தது. சமையலறையில் கேட்ட பாத்திர மோதல்கள் அபர்ணா அங்கேதான் இருக்கிறாள் என்பதை உறுதி செய்தது.

ஹம்சினி தன்னுடைய அறைக்குள் நுழைந்து பேக்கை ஆணியில் மாட்டிவிட்டு வேறு சேலைக்கு மாறி முடித்தபோது அபர்ணா உள்ளே வந்தாள். முகம் வாட்டத்தில் இருந்தது.

''ஹம்சினி..''

''ம்..''

''காப்பி கலந்து வெச்சிருக்கேன். எடுத்துக்கோ''

''அண்ணி..''

''என்ன..?''

''ஏன்... டல்லாயிருக்கீங்க..? உடம்புக்கு ஏதாவது முடியலையா...,.?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லை..''

''பின்னே...?''

அபர்ணா சில விநாடிகள் மௌனமாய் இருந்துவிட்டுப் பேச ஆரம்பித்தாள். ''உன்னை புதன்கிழமையன்னிக்கு பெண் பார்க்க வர்றதா சொல்லியிருந்த மாப்பிள்ளை வீட்டுக்காரங்க கொஞ்ச நேரத்துக்கு முந்தி போன் பண்ணியிருந்தாங்க.''

ஹம்சினி முகத்தில் எந்த உணர்ச்சியையும் காட்டாமல் கேட்டாள்.

''இவ்வளவு சவரன் போடணும்ன்னு ஏதாவது டிமாண்ட் பண்ணினாங்களா?''

''அப்படிக் கேட்டிருந்தாகூடப் பரவாயில்லையே...?''

''அப்புறம்?''

''கேரளாவிலிருந்து யாரோ ஜோஸியக்காரன் அவங்க வீட்டுக்கு வந்தானாம். மாப்பிள்ளை ஜாதகத்தையும் உன்னோட ஜாதகத்தையும் பார்த்தானாம். பொருந்தாத ஜாதகங்கள்ன்னு சொல்லிட்டானாம். அதனால...''

''புரியுது அண்ணி! வர்ற புதன்கிழமை அவங்க பெண் பார்க்க வரமாட்டாங்க... அப்படித்தானே?''

''ம்...''

''இதுக்கா இவ்வளவு கவலைப்படறீங்க...? இந்த மாப்பிள்ளை இல்லேன்னா... இன்னொரு மாப்பிள்ளை...''

''நீ சுலபமாச் சொல்லிட்டே! உங்கண்ணன் எவ்வளவு கஷ்டப்பட்டு இந்த மாப்பிள்ளையைப் பிடிச்சார் தெரியுமா...? இனி

இது மாதிரி ஒரு வரன் அமையறது ரொம்பக் கஷ்டம்..."

"அண்ணனுக்கு இந்த விஷயம் தெரியுமா?"

"தெரியாது. ஆபீஸுக்கு போன் பண்ணிச் சொல்லலாம்ன்னு பார்த்தேன். மனசு கேட்கலை. வீட்டுக்கு வந்த பின்னாடி சொல்லிக்கலாம்ன்னு இருந்துட்டேன். விஷயம் தெரிஞ்சா மனுஷன் அப்படியே இடிஞ்சி போயிடுவார்... மாப்பிள்ளை வீட்டுக்காரங்க கடைசி நிமிஷத்துல ஏன் இப்படி மாறிட்டாங்கன்னு தெரியலையே?"

"காரணம் எனக்குத் தெரியும் அண்ணி..."

"என்ன...?"

"அவங்களுக்கு என்னைக் காட்டிலும் வேற நல்ல அழகான பொண்ணு கிடைச்சிருக்கலாம்."

"ப்ரோக்கர் கிட்டக் கேட்டா உண்மை தெரிஞ்சிடும்" அபர்ணா சொல்லிக் கொண்டிருக்கும்போதே வாசலில் ஸ்கூட்டர் சத்தம் கேட்டது.

"ஹம்சினி... உங்கண்ணன் வந்துட்டார்... அவர்கிட்ட எப்படி விஷயத்தைச் சொல்றதுன்னு ஒரே உதறலாயிருக்கு."

"நா.. வேணும்ன்னா சொல்லிடட்டா அண்ணி?"

"வேண்டாம்.. நானே சொல்லிக்கிறேன்..."

ராஜாமணி உள்ளே வந்தான். முகத்தில் பயணக் களைப்பு. ஹால் சோபாவுக்கு வந்து சாய்ந்தான்.

"அபர்ணா..."

எதிரில் வந்து நின்றாள்.

"ஒரு டம்ளர் தண்ணி..." அபர்ணா சமையலறையை நோக்கித் திரும்ப ராஜாமணி குரல் கொடுத்தான்.

"ஹம்சினி வந்துட்டாளா?"

"ம்.."

"எங்கே... அவ...?"

"ஏண்ணா...?"

அறையிலிருந்து வெளிப்பட்ட ஹம்சினி ராஜாமணிக்குப் பக்கமாய் வந்து நின்றாள்.

அவளிடம் புன்னகையோடு திரும்பினான்.

"ஹம்சினி.."

"அண்ணா...!"

"உனக்கு இன்னும் ஒரு மணிநேரம் அவகாசம் தர்றேன்.

அதுக்குள்ளே நீ உன்னோட பொருள்களை எடுத்துகிட்டு இந்த வீட்டை விட்டுப் போயிடணும்... அதுக்கு மேல் ஒரு நிமிஷம் கூட இங்கே நீ இருக்கக்கூடாது. இருந்தா கழுத்தைப் பிடிச்சு வெளியே தள்ளுவேன்..."

அபர்ணா திடுக்கிட்டுப் போய்க் கணவனைப் பார்த்தாள். "அ..அ..அய்யோ..எ..என்னங்க... இப்படி பேசறீங்க?"

ராஜாமணி தன் இடது கைச் சுட்டு விரலை உயர்த்தினான்.

"இதோ...பார்! உன் கிட்ட ஒரு டம்ளர் தண்ணி கேட்டேன். அதோடு கொஞ்சம் எள்ளையும் சேர்த்துக் கொண்டாந்துடு. தண்ணியையும் எள்ளையும் தெளிச்சுட்டுத் தலைமுழுகிடலாம்.."

ராஜாமணியின் கோபத்தில் அந்த வீடே உஷ்ணமாகித் தகித்தது.

# 4

ராஜாமனியின் கோபத்தையும் ரௌத்ராகாரத்தையும் பார்த்து அதிர்ந்து மிரண்டு போன அபர்ணா சுதாரித்துக் கொண்டு கணவனுக்குப் பக்கத்தில் வந்து நின்றாள்.

"எதுக்காக... இந்த ஊழிக்காலக் கோபம்...? ஹம்சினி வீட்டைவிட்டு வெளியே போற அளவுக்கு அப்படி என்ன தப்புப் பண்ணிட்டா..?"

"அவ தப்புப் பண்ணலைடி..! பெரிய பாதகமே பண்ணியிருக்கா."

"புரியும்படியா சொல்லுங்க.."

"இவளுக்குப் பார்த்த மாப்பிள்ளை வீட்டிலிருந்து போன் வந்திருக்குமே?"

"ம்...ம்...வந்தது..."

"என்ன சொன்னாங்க..?"

"அது.. அது.. வந்து.."

"ஜாதகங்கள் பொருந்தலை... அதனால பெண் பார்க்க வரலைன்னு போன் பண்ணிச் சொன்னாங்க இல்லையா?"

"ஆ..ஆமா.."

"அதுக்கு என்ன காரணம் தெரியுமா..?"

"எ...என்ன காரணம்...?"

"நிக்கறாளே... அவளையே... கேளு...!"

அபர்ணாவின் பார்வை இப்போது ஹம்சினியின் மேல் நிலைத்தது. "என்ன...ஹம்சினி.. இதெல்லாம்..?"

ஹம்சினி மார்புக்குக் குறுக்காகக் கைகளைக் கட்டிக் கொண்டு எங்கோ பார்த்தாள். உதடுகள் பல்வரிசையில் அலட்சியமாய் கடிபட்டிருக்க, முகம் கல்லால் செய்த மாதிரியான தினுசில் ஒருவித இறுக்கத்துக்கு உட்பட்டிருந்தது.

அபர்ணா ஹம்சினியின் தோளைத் தொட்டாள்.

"என்ன... பேசாமே... நிக்கறே...! சொல்லு. என்ன நடந்தது...?"

ராஜாமணி சீறிக் கொண்டு எழுந்தான்.

"அவ பேசமாட்டா... அவளால பேசவும் முடியாது. ஏன்னா அவ பண்ணியிருக்கிற காரியம் அது மாதிரி. இன்னிக்கு அவ தனியா மாப்பிள்ளையை ஒரு ரெஸ்ட்டாரெண்ட்டுக்கு வரவழைச்சுப் பேசியிருக்கா... அவர்கிட்டே இந்தக் கல்யாணத்துல தனக்கு விருப்பமில்லைன்னு சொல்லியிருக்கா...! இன்னிக்குப் பூராவும் அவ ஆபீஸுக்கும் போகலை. சாயந்தரம் ஆறு மணி வரைக்கும் ஊர் சுத்திட்டு வந்திருக்கா... திருட்டுக்கழுதை...!"

ராஜாமணியின் கோபம் இப்போது அபர்ணாவையும் பற்றிக் கொண்டது.

"ஹம்சினி! என்ன இதெல்லாம்... உங்க அண்ணன் சொலறதெல்லாம் உண்மையா? இன்னிக்கு நீ ஆபீஸுக்குப் போகல்லயா..?"

"போ... போகலை.."

"போகாமே...?"

"ஹாஸ்பிடல்ல ஒருத்தரைப் பார்க்க வேண்டியிருந்தது."

"ஓ! சமூக சேவையா..?"

ஹம்சினி தலையசைத்துவிட்டு மௌனமாய் நிற்க அபர்ணா மறுபடியும் கேட்டாள்.

"சரி... மாப்பிள்ளைப் பையனை ரெஸ்ட்டாரெண்ட்டுக்கு வரச் சொல்லிக் கல்யாணத்துல இஷ்டமில்லைன்னு ஏன் சொன்னே...?"

"நா ஒண்ணும் மாப்பிள்ளையை வரச் சொல்லலை... நான் ஹாஸ்பிட்டலுக்குப் போய்ட்டு வெளியே வந்தபோது யதேச்சையா அவர் எதிர்ப்பட்டார். காஷுவலா ரெண்டு நிமிஷம் பேசிக்கிட்டிருந் தோம். கூல்ட்ரிங்க் சாப்பிடலாமான்னு கேட்டார். நான் வேண் டாம்ன்னு சொன்னேன். அவர் கேட்கலை. ரொம்பவும் வற்புறுத்திக் கூப்பிட்டார். பேச்சைத் தட்டமுடியாமேப் போனேன்.. கூல்ட்ரிங்க்

சாப்பிடும்போது இந்தக் கல்யாணத்துல உனக்கு இஷ்டமான்னு கேட்டார். எனக்குப் பொய் சொல்ல மனசு வரலை. உண்மையைச் சொல்லிட்டேன்..."

ராஜாமணி சீறினான். "பண்றதையும் பண்ணிட்டு எவ்வளவு தைரியமாச் சொல்றா பாரு... இனிமேலும் இவளையெல்லாம் வீட்ல வெச்சிருக்கலாமா...? மேரேஜ் புரோக்கர் ரெஸ்ட்டாரெண்ட்ல இவங்க ரெண்டு பேரையும் பார்த்துட்டு எனக்கு போன் பண்ணிச் சொன்னபோதே இந்தக் கல்யாணம் நடக்கப் போறதில்லைன்னு முடிவு கட்டிட்டேன்."

அபர்ணா தவிப்போடு ஹம்சினியின் தோள் மேல் கையை வைத்தாள்.

"நீ இப்படியெல்லாம் நடந்துக்கலாமா ஹம்சினி? உனக்காக உன்னோட அண்ணன் எப்பேர்ப்பட்ட வரனைப் பார்த்து வைச்சிருந்தார். பால் பாத்திரத்தை மணல்ல தட்டிவிட்ட மாதிரி இப்படிப் பாழ் பண்ணிட்டியே...?"

"அண்ணி...! உங்க விருப்பத்துக்காகவும் அண்ணனோட விருப்பத்துக்காகவும் என்னைய நான் மாத்திக்க விரும்பலை. எனக்கு இப்போ கல்யாணம் வேண்டாம்ன்னு சொன்னேன். நீங்க கேட்கலை. திடீர்ன்னு சந்திச்ச மாப்பிள்ளைகிட்ட என்னோட நிலைமையைச் சொன்னேன். அவர் என்னைப் புரிஞ்சுகிட்டார். தட்ஸ் ஆல்.."

ராஜாமணி கேலியாகச் சிரித்தான்.

"உன்னை அவர் புரிஞ்சுகிட்டார். நாங்க உன்னைப் புரிஞ்சுக் கலை... அப்படித்தானே! அப்படின்னா உன்னைப் புரிஞ்சுக்காத நாங்க இருக்கிற இந்த வீட்ல நீ இருக்கக்கூடாது. கிளம்பு."

அபர்ணா பதட்டமாய்க் குறுக்கிட்டாள். "அய்யோ! என்னங்க... நீங்க... அவ சின்னப் பொண்ணு. விவரம் தெரியாமே ஏதோ பண்ணிட்டாங்கிறதுக்காக வீட்டை விட்டுப் போகச் சொல்றது கொஞ்சம் கூடச் சரியில்லை."

ஹம்சினி இறுகிய முகத்தோடு அபர்ணாவிடம் நிமிர்ந்தாள். "இல்லேண்ணி...! நீங்க நினைக்கிற மாதிரி நான் சின்னப் பொண்ணு கிடையாது. நான் பண்ணினது தப்புன்னு அண்ணன் நினைக்கிறார். எனக்கு அது சரின்னு படுது. அவர் எந்த நிமிஷம் என்னைப் பார்த்து வெளியே போன்னு சொன்னாரோ அதே நிமிஷம் நான் மனசளவில வெளியேறிவிட்டேன்."

''ஹம்... சினி...! உன் அண்ணன்தான் ஏதோ கோபத்துல சொல்லிட்டார்ன்னா நீயும் கூடவா இப்படிப் பேசணும்? ஒரு வயசுப் பொண்ணு வீட்டை விட்டு வெளியே போனா குடும்ப கௌரவம் என்னாகிறது...?''

ராஜாமணி சீறினான். ''ஏய்... அபர்ணா! நீ வாயை மூடிக்கிட்டு உள்ளே போ... இவளுக்கு யாரும் வக்காலத்து வாங்க வேண்டாம்... அவ இந்த வீட்டை விட்டு இன்னும் ஒரு மணி நேரத்துல வெளியே போயாகணும்.''

''நீங்க பேசறது உங்களுக்கே நியாயமாப்படுதா?''

''எது நியாயம் எது அநியாயம்ன்னு எனக்குத் தெரியும்... இந்த வீட்ல அவ இருக்கக்கூடாது... மொதல்ல அவளை வெளியே அனுப்பு...''

''வே...வேண்டாங்க...''

ராஜாமணி அபர்ணாவை முறைத்தான். மார்புக்குக் குறுக்காக கைகளைக் கட்டிக் கொண்டு நிதானமான குரலில் கேட்டான்.

''அவ இந்த வீட்ல இருக்கணும்ன்னு நீ நினைக்கறியா?''

''ஆ..ஆமாங்க...''

''அப்படீன்னா... நான் வெளியே போயிடறேன்.'' சொல்லிக் கொண்டே நகர முயன்ற ராஜாமணியின் கையைக் கப்பென்று பிடித்தாள் ஹம்சினி.

''அண்ணா..! எனக்காக நீங்க இந்த வீட்டை விட்டுப் போக வேண்டாம். அண்ணி என் மேல இருக்கிற பிரியத்தில அப்படிச் சொல்லிட்டாங்க...! இனிமே மனசு மாறி நீங்களே இருக்கச் சொன்னாலும்கூட இந்த வீட்ல இருக்கமாட்டேன்.''

''மொதல்ல போய்த் தொலை.. பேசிட்டு நிக்காதே. உன்னைப் பார்க்கப் பார்க்க எனக்குப் பத்திட்டு வருது...''

ஹம்சினி தன்னுடைய பொருள்களை எடுப்பதற்காக அறையைப் நோக்கிப் போனாள்.

''அப்புறம்...''

''அப்புறம் என்ன... அடுத்த பத்து நிமிஷ நேரத்துக்குள்ளே என்னோட திங்க்ஸ எடுத்து சூட்கேஸ்ல வெச்சுகிட்டு வீட்டை விட்டு வெளியே வந்துட்டேன். இன்னிக்குச் சரியா வீட்டை விட்டு வெளியே வந்து ஒரு மாசமாவுது... எல்லாமே நினைவு போல் இருக்கு சாருமதி.''

அந்த சாருமதி பெருமூச்சுவிட்டாள்.

"நீ இந்த வொர்க்கிங் விமன் ஹாஸ்டல்ல தங்கியிருக்கிறது உங்க அண்ணனுக்கும் அண்ணிக்கும் தெரியுமா...?"

"ம்... தெரியும்..."

"இந்த ஒரு மாசகாலத்துக்குள்ளே என்னிக்காவது நீ அவங்களைப் பார்த்தியா...?"

"அண்ணியை மட்டும் ஒரு நாள் பார்த்தேன்..."

"எங்கே...?"

"பஸ்... ஸ்டாப்ல...! பார்த்ததுமே அழ ஆரம்பிச்சுட்டாங்க. சமாதானம் பண்ணி அனுப்பறதுக்குள்ளே போதும் போதும்ன்னு ஆயிடுச்சு..."

"உங்க அண்ணனை நீ பார்க்கவேயில்லை?"

"இல்லை..."

"இப்படி ஃபேமிலியைப் பிரிஞ்சு வந்துட்டோமேன்னு ஒரு நாளாவது நீ கலங்கியதுண்டா...?"

"நெவர்...! ஒரு நிமிஷம் கூட நான் கலங்கியது கிடையாது..."

"ஆச்சர்யமாயிருக்கு ஹம்சினி."

"என்ன ஆச்சரியம்...?"

"உன்னால எப்படிப் பாசத்தை உதற முடிஞ்சுது..."

"பதில் ரொம்ப ஈஸி. என் பாசமெல்லாம் தனிப்பட்ட மனுஷங்க மீது கிடையாது. இந்த சொசைட்டி மேல பாசத்தோட பரப்பளவு அதிகமாகும் போது சொந்தபந்தங்கள் கண்ணுக்குத் தெரியாது..."

சாருமதி புன்னகைத்தாள். "ஹம்சினி! நீ உண்மையிலேயே ஒரு வித்தியாசமான பெண்தான். என்னோட தோழி மைதிலி உன்னைப் பத்திச் சொன்னபோது கூட கொஞ்சம் அண்டர் எஸ்டிமேட் பண்ணிகிட்டுத்தான் வந்தேன். நான் இந்த எழுத்துத்துறைக்கு வந்து இருபது வருஷமாகிறது. இந்த இருபது வருஷ காலத்துல எத்தனையோ நாவல்கள் எத்தனையோ தொடர்கதைகள் எழுதிட்டேன். எத்தனையோ கதாபாத்திரங்கள் எப்படியெப்படியெல்லாமோ தியாகம் பண்ணிட்டாங்க... ஆனா உன்னை மாதிரி ஒரு கேரக்டரை இதுவரைக்கும் நான் உருவகம் பண்ணிக்கூடப் பார்த்தது கிடையாது. என்னோட அடுத்த நாவலுக்கு நீதான் மையப் பாத்திரம்..."

ஹம்சினி சிரித்தாள்.

"நான் இந்த சமூகத்துக்காகப் பண்ணிட்டிருக்கிறது ரொம்பவும்

கொஞ்சம்தான். என்னைக் காட்டிலும் பெரிய அளவுல பண்ணிக்கிட்டிருக்காங்க. அவங்களைப்பத்தி நீங்க எழுதலாமே சாருமதி...?"

"அவங்க பண்றது விளம்பரத்துக்காக! நீ அப்படியில்லேயே...! கோயமுத்தூரைச் சேர்ந்த பாகீரதியம்மாவுக்கு உன்னோட கிட்னியைக் கொடுத்து அதன் மூலமாக் கிடைச்ச ரெண்டு லட்ச ரூபாய்ப்பணத்தை உடல்ஊனமுற்றோர்பள்ளிக்கூடத்துக்கு க்ளாஸ் ரூம் கட்டக் கொடுத்திருக்கே. இப்படியொரு மனிதாபிமான எண்ணம் யாருக்கு வரும்...? பை...த...பை... ஹம்சினி! உன்னோட கிட்னியைப் பொருத்திக்கிட்ட அந்த பாகீரதியம்மா இப்போ எப்படி இருக்காங்க...?"

"நார்மலுக்கு வந்துட்டாங்க..."

"போய்ப் பார்த்தியா...?"

"ரெண்டு தடவை..."

"கிட்னி கொடுத்தது நீதான்னு அவங்க தெரிஞ்சுட்டாங்களா?"

"இல்லை...! டாக்டர் தீர்த்தராமன் கடைசி வரைக்கும் அந்த உண்மையைச் சொல்லவேயில்லை. இனி மேலும் அவர் சொல்லமாட்டார்."

"இதுவரைக்கும் நீ சொன்ன சம்பவங்களை வெச்சு அழகா ஒரு கதை பண்ணி ஏதாவது ஒரு முன்னணிப் பத்திரிகைக்கு எழுதலாம்ன்னு இருக்கேன். உனக்கு ஏதாவது ஆட்சேபணை உண்டா?"

"எனக்கு எந்த ஆட்சேபணையும் கிடையாது. பேரையும் ஊரையும் மட்டும் மாத்திக்கிட்டாப் போதும்..."

ஹம்சினி சொல்லிக் கொண்டிருக்கும் போதே அந்த விடுதியின் ஆயா அறைக் கதவுக்குப் பக்கத்தில் வந்து நின்றாள்.

"என்ன பாக்யம்...?"

"அம்மா... உங்களைப் பார்த்துப் பேச விஸிட்டர்ஸ் ரூம்ல ஒருத்தர் வந்து காத்துட்டிருக்கார்..."

ஹம்சினியின் புருவங்கள் முடிச்சிட்டுக் கொண்டன. "என்னைப் பார்க்கிறதுக்காக...?"

"ஆமாங்கம்மா..."

"அவரோட பேரைக் கேட்டியா...?"

"இல்லிங்கம்மா..." சொல்லிவிட்டு ஆயா போய் விட ஹம்சினி குழப்ப முகத்தோடு எழுந்தாள்.

"யார் வந்திருக்காங்கன்னு தெரியலையே...?"

சாருமதி புன்னகைத்தாள்.

"நான் சொல்லட்டுமா...?"

"சொல்லுங்க..."

"உங்க அண்ணன்...!"

"எனக்கு நம்பிக்கையில்லை..."

"போய்ப் பாரு... கண்டிப்பா உங்க அண்ணன்தான். எத்தனை நாளைக்குத்தான் பாசத்துக்கு வேலி போட்டு வைக்க முடியும்..."

ஹம்சினி சிரித்தாள். "நான் எப்படி ஒரு சராசரிப் பெண் கிடையாதோ... அதே மாதிரி என்னோட அண்ணனும் சராசரி ஆண் கிடையாது. என்னைக் காட்டிலும் அவருக்குப் பிடிவாத குணம் அதிகம்."

"அந்தப் பிடிவாதமெல்லாம் ஒரு எல்லை வரைக்கும் தான். அதுக்கப்புறம் அது பிசுபிசுத்துப் போகும். நீ போய்ப் பார்த்துட்டு வா. நான் இங்கேயே வெயிட் பண்றேன்..."

ஹம்சினி கண்ணாடி பார்த்துக் கேசத்தைத் திருத்திக் கொண்ட பின் அறையில் இருந்து வெளிப்பட்டு வராந்தாவில் வேக நடை போட்டு ஹாஸ்டலின் முன் பக்கம் இருந்த விசிட்டர்ஸ் செல்லை நோக்கிப் போனாள்.

அந்த மாலை நேர ஹாஸ்டல் கொஞ்சம் கலகலப்பாய் இருந்தது. ஹாலில் டி.வி. இரைச்சல்.

ஹம்சினியின் மனசுக்குள் ஒரு பெரிய கேள்விக் குறி! 'வந்து காத்துக் கொண்டிருக்கிற நபர் யாராக இருக்கும்...?'

'சாருமதி சொன்னது போல் ஒரு வேளை அண்ணன்தானோ?'

நடையில் வேகம் கூடியது.

மேலும் ஒரு அரை நிமிஷ நடை. ஹாஸ்டலின் ஆபீஸ் அறைக்குப் பக்கத்தில் இருந்த விஸிட்டர்ஸ் செல் வந்தது. உள்ளே நுழைந்தாள்.

ஏற்கெனவே செல்லில் இருந்த அந்த நான்கைந்து பெண்கள் தத்தம் உறவினர்களோடு பெஞ்சுகளில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்க ஹம்சினி நின்று சுற்றும் முற்றும் பார்த்தாள்.

பார்வைக்கு யாரும் கிடைக்காமல் போகவே மெல்ல வெளியே வந்தாள்.

பின்பக்கம் அந்தக் குரல் கேட்டது.

"ஸாரி ஃபார் த டிஸ்டர்பன்ஸ்."

ஹம்சினி திரும்பினாள்.

சரண். பாகீரதியம்மாளின் மகன் சரண். நெற்றியில் வியப்பு வரிவரியாய் ஜனித்தது.

"நீங்களா?"

"ஸாரி! காரை லாக் பண்ணப் போயிருந்தேன்." சொன்னவன் சில விநாடிகள் பேச்சை நிறுத்திவிட்டு தொடர்ந்தான்.

"நான் இங்கே வந்தது உங்களுக்கு ஆச்சர்யமாயிருக்கு இல்லையா...?"

"ஆ... ஆமா..."

"டாக்டர் தீர்த்தராமனின் ஹாஸ்பிடல்ல வெச்சு உங்களை நாலைஞ்சு தட்வை பார்த்திருக்கேன்... நீங்க ஒரு சோஷியல் ஒர்க்கர்ங்கிறதை டாக்டர் மூலமாத் தெரிஞ்சுகிட்டேன். எனக்கு உங்க மாதிரியான சோஷியல் ஒர்க்கர்ஸை ரொம்பவும் பிடிக்கும்..."

ஹம்சினியின் மனசுக்குள் யோசனை ஓடியது. 'டாக்டர் தீர்த்தராமன் உண்மையைச் சொல்லியிருப்பாரோ?'

'அவர் அப்படிச் சொல்லமாட்டாரே!'

சரண் கேட்டான்.

"என்ன யோசனை மிஸ் ஹம்சினி...?"

"நீங்க என்ன விஷயமா என்னைப் பார்க்க வந்திருக்கீங்கன்னு தெரிஞ்சாப் பரவாயில்லை..."

"ஓ... ஸாரி... இதோ விஷயத்துக்கு வந்துட்டேன். எனக்கு வர்ற இருப்பத்தி மூணாம் தேதி கல்யாணம். கோயமுத்தூர் 'சங்கமம்' கல்யாண மண்டபத்துல நடக்க இருக்கிற கல்யாணத்துக்கு நீங்க அவசியம் வரணும்..."

ஹம்சினி மலர்ந்தாள். "உங்களுக்குக் கல்யாணமா... ரொம்பவும் சந்தோஷம். அட்வான்ஸ் கங்க்ராட்ஸ்."

சரண் கையில் வைத்திருந்த பேக்கைப் பிரித்து ஆர்ப்பாட்டமாய் இருந்த ஒரு கல்யாண அழைப்பிதழை எடுத்து நீட்டினான்.

"தேங்க்ஸ்..." வாங்கி கைகளில் வைத்துக் கொண்டாள் ஹம்சினி.

"பிரிச்சுப்பாருங்க ஹம்சினி..."

தயக்கமாய் பிரித்தாள்.

விலையுயர்ந்த தாளில் லேஸர் பிரிண்ட் வர்ண ஜாலமாய் வார்த்தைகளைப் பதித்திருக்க மணமகள் பெயர் இருக்க வேண்டிய இடம் காலியாக இருந்தது.

ஹம்சினி வியப்பாய் நிமிர்ந்தாள்.

''என்னங்க இது... கல்யாணப் பெண்ணோட பேரையே காணோம்...?''

சரண் புன்னகைத்தான்.

''கல்யாணப் பெண்கிட்டயிருந்து இன்னமும் சம்மதம் கிடைக்கலையே...?''

# 5

ஹம்சினியின் பெரிய கண்களில் வியப்பு ஸ்லோமோஷனில் பரவியது. சரணைக் குழப்பப் பார்வை பார்த்தாள்.

''எ... என்ன... சொன்னீங்க...? கல்யாணப் பொண்ணுகிட்டயிருந்து இன்னமும் சம்மதம் கிடைக்கலையா?''

''ஆமா...''

''அதுக்குள்ளே அவசரப்பட்டு எதுக்காக இன்விடேஷனை பிரிண்ட் பண்ணியிருக்கீங்க...?''

''அந்தப் பொண்ணுகிட்டயிருந்து சம்மதம் கிடைக்கும்ங்கிற நம்பிக்கைதான்...!''

''நீங்க ரொம்பவும் குழப்பறீங்க... மிஸ்டர் சரண்... யார் அந்தப் பொண்ணு...''

''கொஞ்சம் கெஸ் பண்ணிப் பாருங்களேன்...''

''ஸாரி...! உங்ககிட்ட நான் அதிகம் பேசிப் பழகினது இல்லை... உங்களுக்கு வேண்டியவங்க யார்ங்கிற விவரமும் எனக்குத் தெரியாது. நீங்க விரும்பற பெண் யார்ன்னு எனக்கு எப்படித் தெரியும்...?''

சரண் அவளுடைய கண்களை நேருக்கு நேராய்ப் பார்த்தபடி கேட்டான்.

''அந்தப் பெண் நீங்களாக ஏன் இருக்கக்கூடாது...?''

ஹம்சினி அதிர்ந்து நிமிர்ந்தாள்.

''சரண்! வாட் டூ யூ... மீன்...?''

''ஐ... மீன்...! ஐ... லவ்... யூ...'' ஹம்சினி அதிர்ச்சியினின்றும் விடுபட்டு மெல்லப் புன்னகைத்தபடி கேட்டாள். ''நீங்க என்னைக் காதலிக்கறீங்களா?''

''ஆமா...''

ஹம்சினியின் புன்னகை பரப்பளவில் பெரிதாகி - பின் எதிர்பாராத ஒரு விநாடியில் பெரிய சிரிப்பாய் வெடித்தது.

"எதுக்காக இப்போ இந்தத் தடாலடிக் காதல்...?"

"இது தடாலடிக் காதல் கிடையாது. இதய பூர்வமாய் ஒவ்வொரு நிமிஷமும் உணரப்பட்டு உருவான காதல் இது..."

"இந்த காதலுக்கு ஏதாவது காரணம் இருக்கணுமே!"

சரண் இப்போது சிரித்தான். "காரணம் இல்லாமே காதல் வருமா...?"

"என்ன காரணம்...?"

"என்னோட அம்மா இன்னிக்கி உயிர் வாழ்ந்துட்டிருக்கிறதே உங்களாலதான்...! என்ன பார்க்கறீங்க ஹம்சினி... நீங்க என்னோட அம்மாவுக்குக் கிட்னி கொடுத்த விஷயம் எனக்குத் தெரியும்..."

"எ... எ... எப்படித் தெ... தெ... தெரியும்! டாக்டர் தீர்த்தராமன் சொன்னாரா...?"

"அவர் சொல்வாரா...?"

"பின்னே...?"

"அதே ஹாஸ்பிட்டல்ல வேலை பார்க்கிற ஒரு நர்ஸ் மூலமாத் தெரிஞ்சுகிட்டேன்... அந்த நர்ஸ் உங்க ஃபேமிலியைப் பத்தியும் சொன்னா. அண்ணா அண்ணிகூட சண்டை போட்டுக்கிட்டு வீட்டைவிட்டே வெளியே வந்துட்டீங்களாமே...?"

ஹம்சினி மௌனம் சாதிக்க, சரண் தொடர்ந்தான்.

"ஹம்சினி...! நான் உங்ககிட்டப் பேசிட்டிருக்கிறது கொஞ்சம் அதிகப் பிரசங்கித்தனமாகக்கூட இருக்கலாம். திடீர்னு உங்ககிட்ட வந்து காதலுக்கு அப்ளிகேஷன் போடறதும் கல்யாணப் பத்திரிக்கையைக் கொண்டு வந்து காட்டறதும் கொஞ்சம் அநாகரீகமாகக் கூடத் தெரியலாம். எம் மனசில் இருக்கிற எண்ணத்தைத் தெரியப்படுத்த வேற வழி எனக்குத் தெரியலை... இந்த வழி தப்புன்னு நீங்க நினைச்சா என்னை மன்னிச்சுடலாம்..."

ஹம்சினி பெருமூச்சொன்றை வெளியேற்றிவிட்டுச் சரணை ஏறிட்டாள்.

"உங்க மதர்க்கு நான் கிட்னி கொடுத்த ஒரே ஒரு காரணத்துக்காக என் மேல இரக்கப்பட்டு என்னைக் கல்யாணம் பண்ணிக்க முன்வந்திருக்கீங்க இல்லையா...?"

"அதுக்காக மட்டும் இல்லை..."

"பின்னே...?"

"மத்தவங்களுக்கு உதவணும்ங்கிற எண்ணம் நிறையப் பேர்க்கு இருக்காது. அப்படி இருந்தாலும் அதுல சுயநலம் இருக்கும். ஆனா உங்ககிட்ட அந்த சுயநலமும் இல்லை. கிட்னி கொடுத்ததின் மூலமா உங்களுக்குக் கிடைச்ச ரெண்டு லட்ச ரூபாயையும் உடல் ஊனமுற்றோர் சிறுவர் பள்ளிக்குக் கட்டிடம் கட்டக் கொடுத்துட்டீங்க... நீங்க வேலைக்குப் போய்ச் சம்பாதிக்கிற பணத்தில் பாதி முதியோர் விடுதிகளுக்குப் போயிடுது. மாசா மாசம் ரத்ததான முகாம்களை நடத்தி தேவையான ரத்தத்தை நோயாளிகளுக்குத் தர்றீங்க... இதுதான் உண்மையான சிவப்புப் புரட்சின்னு எல்லாப் பத்திரிக்கைகளும் உங்களைப் பாராட்டியிருக்கு... இப்படிப் பொது நலமே உயிர்மூச்சா நினைச்சு மத்தவங்களுக்காக வாழ்ந்துகிட்டு இருக்கிற உங்களைக் கல்யாணம் பண்ணிக்க ஆசைப்படறேன்."

"கல்யாணம்ங்கிறது ஒருநாள் சடங்கோ சம்பிரதாயமோ கிடையாது. இது வாழ்க்கைப் பிரச்னை... உணர்ச்சிவசப்பட்டு ஒரு முடிவு எடுத்துட்டுப் பின்னாடி சாவகாசமா உட்கார்ந்து சங்கடப்படக்கூடாது."

"இது உணர்ச்சிவசப்பட்டு எடுத்த முடிவு கிடையாது ஹம்சினி... தீர்க்கமா யோசனை பண்ணி எடுத்த முடிவு..."

"உங்க அப்பாவும் அம்மாவும் இந்தக் கல்யாணத்துக்கு ஒத்துக்குவாங்களா...?"

"என்ன கேட்டீங்க...?"

"நீங்க என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு உங்க அம்மாவும் அப்பாவும் ஒத்துக்குவாங்களான்னு கேட்டேன்..."

"அவுங்க சொல்லித்தான் உங்களைக் கல்யாணம் பண்ணிக்கிற எண்ணமே எனக்கு வந்தது. அப்பாகூட என்னோட புறப்பட்டு வரத் தயாராயிருந்தார். நான்தான் வேண்டாம்ன்னு சொல்லித் தனியா வந்தேன். நான் சொல்றதுல உங்களுக்கு நம்பிக்கையில்லேன்னா இந்தக் கார்டுல அப்பாவோட செல்போன் நெம்பர் இருக்கு. நீங்க போன் பண்ணித் தாராளமா கேட்டுக்கலாம்."

ஒரு விசிட்டிங் கார்டை நீட்டினான் சரண். ஹம்சினி அதை வாங்காமல் புன்னகைத்தாள்.

"ஸோ... என்னை மருமகளாக்கிக்க உங்க அம்மாவும் அப்பாவும் தயார்...?"

"எஸ்...."

"சரண்...! உங்க ஃபேமிலிக்கு என் மேல இப்படியொரு

நல்லெண்ணம் உண்டாகியிருக்கிறது எனக்கு ரொம்பவும் சந்தோஷமாவே இருக்கு. அந்த நல்லெண்ணம் கல்யாணம் வரைக்கும் போயிருக்க வேண்டாம்..."

"என்னைக் கல்யாணம் பண்ணிக்க உங்களுக்கு இஷ்டம் இல்லையா...? இல்லை இந்தக் கல்யாணத்து மேலேயே உங்களுக்கு இஷ்டம் இல்லையா...?"

"நீங்க ரெண்டாவதா சொன்னதுதான் சரி..."

"உங்களுக்குக் கல்யாணத்து மேல் அப்படியென்ன வெறுப்பு...?"

"எனக்கு வெறுப்பு கிடையாது..."

"பின்னே...?"

"என்னை யார் கல்யாணம் பண்ணிகிட்டாலும் சரி அவங்களுக்கு நான் ஒரு நல்ல மனைவியா நடந்துக்க முடியாது."

"ஏன்...?"

"காரணம்... சமூக சேவைகளில் எனக்கு இருக்கிற நாட்டம்தான். நான் கல்யாணம் பண்ணிகிட்டா என் லட்சியத்தோட எல்லை சுருங்கிவிடும். குடும்பம், கணவன், மாமியார் மாமனார் அடுக்கப்புறம் குழந்தைகள் என்கிற சின்ன வட்டத்துக்குள்ளே என் வாழ்க்கை அடங்கிவிடும். அதை நான் விரும்பலை..."

சரண் சிரித்தான். "நீங்க கல்யாணம் பண்ணிக்க யோசிக்கிறதுக்கான காரணம் எனக்குப் புரிஞ்சுபோச்சு. உங்க லட்சியத்துக்குத் தடை போடாத ஒரு கல்யாண வாழ்க்கை அமைஞ்சா அதுக்கு நீங்க மறுப்புச் சொல்ல மாட்டீங்களே...?"

"அது... அது... வந்து..."

"இதோ பாருங்க... ஹம்சினி...! எங்க ஃபேமிலிக்கு உங்களைப் பிடிச்சதுக்குக் காரணம் உங்ககிட்ட இருக்கிற சமூக சேவை மனப்பான்மைதான்... ஸோ... நீங்க என்னைக் கல்யாணம் பண்ணிகிட்ட பின்னாடியும் உங்க லட்சியத்துக்கு இடையூறாக நாங்க யாரும் இருக்கமாட்டோம். இந்த உறுதி மொழியை என்னோட ஃபாதர் மதர் வாயால கேட்கப் பிரியப்பட்டா உடனே இப்பவே நீங்க புறப்பட்டு வரலாம்..."

"வேண்டாம்...! இந்த விஷயத்துல நான் யோசிக்க வேண்டியது நிறைய இருக்கு..."

"யோசியுங்க...! தாராளமா யோசியுங்க. ஒரு மாசம் உங்களுக்கு டயம் தர்றேன். உங்க வெல்விஷர்ஸ் கிட்டே கன்சல்ட் பண்ணுங்க.

அதுக்கப்புறமா ஒரு முடிவுக்கு வாங்க! உங்களைக் கல்யாணம் பண்ணிக்க நான் அவசரப்படலை... காத்துக்கிட்டிருக்கேன். நீங்க எவ்வளவுதான் காத்திருக்கச் சொன்னாலும் நான் தயார். பட்... எனக்கு ரிசல்ட் பாஸிட்டிவா வேணும். இன்னியிலிருந்து சரியா ஒரு மாசம் கழிச்சு உங்களை நான் மீட் பண்ணுவேன். அதுவரைக்கும் நீங்க யோசிக்கலாம்."

சரண் புன்னகையோடு சொல்லி முடித்து எழுந்து போன பின்னாடியும் ஹம்சினி அப்படியே அயர்ந்து போய் உட்கார்ந்திருந்தாள். மனசுக்குள் புயல் ஒன்று மையம்கொண்டு எத்திசையும் நோக்கிச் செல்லாமல் ஒரே இடத்தில் சுழன்று கொண்டிருந்தது.

வாரம் ஒன்று கழிந்து போயிருக்க அன்றைக்கு மாலை ஆறுமணி.

ஹம்சினி ஆபீஸினின்றும் வெளிப்பட்டு பஸ் ஸ்டாப்பை நோக்கி நடைபோட்டாள். தலைக்கு மேல் அழகான மேகங்கள் எந்த நிமிஷமும் மழை பெய்யும் சாத்தியத்தோடு உறுமிக் கொண்டிருந்தன.

'பஸ்ஸுக்குக் காத்திருக்காமல் ஒரு ஆட்டோ பிடித்து ஹாஸ்டல் போய்ச் சேர்ந்துவிடலாமா...?'

யோசித்த விநாடி தனக்குப் பின்னால் நெருக்கமாய் யாரோ வரும் உணர்வில் சட்டென்று திரும்பிப் பார்த்தாள்.

அண்ணன் ராஜாமணி.

"அ... ண்... ணா..." லேசாய் அதிர்ந்தவள் வாய் குழறி அப்படியே நின்றாள். ராஜாமணி சற்றே மெலிந்து தெரிந்தான். சவரம் செய்யாத தோற்றம். கண்களில் ஒருவித சோகம் உறைந்து போயிருந்தது.

"நல்லாயிருக்கியா ஹம்சினி...?" கேட்ட ராஜாமணியைக் கண்களில் நீர் தளும்பப் பார்த்தாள் ஹம்சினி.

"அண்ணா...! நீங்க... ஏன்... இப்படி இருக்கீங்க...? உங்க உடம்புக்கு என்ன...?"

"எனக்கொண்ணுமில்லை... உன்னோட அண்ணிக்குத்தான் உடம்பு சரியில்லை..."

"அவங்களுக்கு [illegible]...?"

"என்னமோ தெரி[illegible] போனதிலிருந்தே அவ [illegible] மெலிஞ்சிட்டே

வந்தா... டாக்டர்ஸ்கிட்டே கூட்டிப்போனேன். டாக்டர்ஸ் செக் பண்ணிப் பார்த்துட்டு உடம்புல எந்தக் கோளாறும் இல்லைன்னு சொல்லிட்டாங்க... போன வாரம் வீட்ல சமையல் பண்ணிட்டிருக்கும்போது திடீர்ன்னு மயக்கம் போட்டு விழுந்துட்டா..."

"அய்யய்யோ... அப்புறம்...?"

"உடனே கொண்டுபோய் ஹாஸ்பிட்டலைஸ் பண்ணிட்டேன். இப்போ ஹாஸ்பிட்டல்லதான் இருக்கா...!"

"எந்த ஹாஸ்பிட்டல்...?"

"ஜோதிலிங்கம் நர்சிங் ஹோம்."

"தி.நகரில் இருக்கே... அதுவா...?"

"அதுவேதான்...! கடந்த ரெண்டு நாளா உன்னைப் பார்க்கணும்னு சொல்லி ஒரே நச்சரிப்பு... அதான் உன்னைக் கூட்டிட்டுப் போலாம்ன்னு ஆபீஸுக்கு வந்தேன். உனக்கு என் மேல என்ன கோபம் இருந்தாலும் அதையெல்லாம் ஒரு ஓரமாத் தள்ளி வெச்சுட்டு உன்னோட அண்ணியைப் பார்க்கிறதுக்காக ஒரு பத்து நிமிஷம் வந்துட்டுப் போனாப் பரவாயில்லை..."

"என்னண்ணா...! இதுக்குப் போய் என்கிட்டக் கேட்டுகிட்டு இருக்கணுமா..." சொன்னவள் ரோட்டுப் பக்கம் திரும்பிப் பார்த்துக் காலியாய் போன ஒரு ஆட்டோவை நிறுத்தினாள்.

ஏறிக் கொண்டார்கள்.

இருபது நிமிஷப் பயணத்தில் ஜோதிலிங்கம் நர்ஸிங் ஹோம் வந்தது. ஸ்பெஷல் வார்டில் அட்மிட் செய்யப்பட்டிருந்த அபர்ணா நிறையவே மெலிந்திருந்தாள். ஹம்சினியைப் பார்த்ததும் கட்டிலில் படுத்து இருந்தவள் ஒரு சின்னக் குழந்தையாய் எழுந்து வந்து கட்டிக் கொண்டாள்.

"ஹ... ம்... சி... னி...!"

"அ... ண்... ணி...!"

"என்னைப் பார்க்க வரணும்ன்னு உனக்கு இப்பதான் தோணிச்சா...?"

ஹம்சினிக்குப் பேச முடியாமல் தொண்டை அடைத்துக் கொண்டது. அபர்ணா மறுபடியும் பொருமினாள்.

"உனக்கு நல்ல மனசு... இல்லேன்னா அண்ணி ஒருத்தி இருக்காளேன்னு எட்டிக்கூடப் பார்க்காமே இருப்பியா..."

"அது .. வந்து அண்ணி.."

"நீ சண்டை போட்டது உங்க அண்ணன்கிட்டதானே... நான்

மேல என்ன கோபம்...? திருட்டுத்தனமா என்னை வந்து பாக்கக்கூடாதா...? சரி... நீ ரொம்பவும் ரோஷக்காரி... வீட்டுக்கு வரவேண்டாம். ஒரு போனாவது பண்ணிப் பேசலாமே..."

ராஜமணி குறுக்கிட்டாள். "அபர்ணா! பழசைக் கிளறிட்டிருக்காதே... நடந்ததையெல்லாம் மறந்துடுவோம். உன்னைப் பார்க்க வந்தவிட்டே ரெண்டு வார்த்தை சந்தோஷமாப் பேசு...! உனக்கு உடம்பு இப்படியிருக்குன்னு சொன்னதுமே ஒரு விநாடிகூட யோசிக்காமே உடனே புறப்பட்டு வந்துட்டா..."

ஹம்சினி அபர்ணாவின் கன்னங்களைத் தடவினாள். "உங்க உடம்புக்கு என்ன அண்ணி...?"

அபர்ணா வெறுமையாய்ச் சிரித்தாள்.

"என்னோட உடம்புக்கு என்னான்னு எனக்கும் தெரியலை... அந்த டாக்டர்களுக்கும் தெரியலை... நல்லாச் சாப்பிட முடியுது... இருந்தாலும் உடம்பு மெலிஞ்சுட்டே போகுது... அடிக்கடி மயக்கம் வருது..."

"இங்கே அட்மிட்டாகி எவ்வளவு நாளாச்சு?"

"ஒரு வாரம்..."

ஹம்சினி எழுந்தாள். "நான் போய் டாக்டரைப் பார்த்து விவரம் என்னான்னு கேட்டுட்டு வந்துடறேன்..."

"அப்புறம் கேட்டுக்கலாம் ஹம்சினி..."

"நோ... நோ... உங்களுக்கு என்ன உடம்புன்னு இப்போ தெரிஞ்சாகணும்... இன்னிக்கு சிட்டியில் இருக்கிற எல்லா ஸ்பெஷலிஸ்ட் டாக்டர்களையும் எனக்குத் தெரியும். உங்க உடம்புக்கு என்னன்னு கண்டுபிடிக்கக் குணப்படுத்த நாளாச்சு... டாக்டர் ஜோதிலிங்கத்தையும் எனக்குத் தெரியும். நிறைய மெடிக்கல் கேம்பஸ்ல பார்த்துப் பேசியிருக்கேன்... நீங்க என்னோட அண்ணின்னு அவருக்குத் தெரிஞ்சா இன்னமும் ஸ்பெஷல் கேர் எடுத்துக்குவார். நான் போய்ப் பேசிட்டு வந்துடறேன்."

ஹம்சினி அறையினின்றும் வெளிப்பட்டு வராந்தாவுக்கு வந்தாள். வராந்தாவில் சிறிது நேரம் நடந்து இரண்டாவது மாடியில் இருந்த டாக்டரின் அறையை நெருங்கிய விநாடி பின்னால் அந்தக் குரல் கேட்டது.

"எக்ஸ்க்யூஸ்மீ..."

திரும்பினாள்.

அந்த நர்ஸ் நின்றிருந்தாள். உதட்டில் சின்னதாய் ஒரு புன்னகை.

கேட்டாள்.

"நீங்க... ஹம்சினிதானே...?"

"ஆமா..."

"உங்களைப்பத்திக் கேள்விப்பட்டிருக்கேன். பேப்பர்ல போட்டோ பார்த்திருக்கேன். என்னோட பேர் இந்திரா. இதே ஹாஸ்பிட்டல்ல ஸ்டாஃப் நர்ஸா இருக்கேன். உங்களை மாதிரியே எனக்கும் சமூக சேவைகளில் ஈடுபாடு அதிகம்..."

"அப்படியா! கேட்கவே ரொம்ப சந்தோஷமாயிருக்கு."

"பேஷண்ட் அபர்ணாவைப் பார்க்க வந்தீங்க போலிருக்கு."

"ஆமா..."

"இவங்க உங்களுக்கு என்னாகணும்...?"

"அண்ணி..."

"மிஸ்டர் ராஜாமணி உங்ககூடப் பிறந்த ப்ரதரா...?"

"ஆமா..."

"உங்க குடும்ப விஷயத்துல நான் தலையிடறதா நீங்க நினைக்கலைன்னா நான் ஒரு விஷயம் சொல்லலாமா...?"

ஹம்சினி திகைப்பாய் நிமிர்ந்தாள்.

"எ... எ... என்ன சொல்லப்போறீங்க...?"

நர்ஸ் இந்திரா சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு "அப்படி ஓரமா போய் நின்னுகிட்டுப் பேசலாமா?" என்றாள்.

"ம்..." குழப்பமாய்த் தலையசைத்த ஹம்சினி இந்திராவைப் பின் தொடர்ந்தாள். இருதயம் தன் துடிப்பை அதிகரித்துக் கொண்டது.

## 6

ஹம்சினியும் நர்ஸ் இந்திராவும் சுவரோரமாய்ப் போய் நின்று கொண்டார்கள். இதயம் படபடக்கக் கேட்டாள் ஹம்சினி.

"என்ன விஷயம்... சொல்லுங்க..."

"உங்க ஃபேமிலி மேட்டர்ல மூக்கை நுழைக்கிறது எனக்கே சரியாப்படலைதான்... இருந்தாலும்..."

"விஷயம் எதுவாக இருந்தாலும் பரவாயில்லை. சொல்லுங்க..."

இந்திரா சில விநாடிகள் தயங்கிவிட்டுத் தொடர்ந்தாள்.

"உங்க ப்ரதர் ராஜாமணியும் அண்ணி அபர்ணாவும் இன்னிக்கு உங்க மேல் காட்டின அன்பு உண்மையானதுன்னு நீங்க நினைக்கறீங்களா...?"

"உண்மையானதுதான்...! அதிலென்ன சந்தேகம்...?"

"தப்பு... அது வேஷம்..."

"வேஷமா...?"

"வேஷமேதான்..."

"உங்களுக்கு எப்படி தெரியும்...?"

"கேட்டேன்..."

"கேட்டிங்களா...?"

"ம்... அவங்க ரெண்டு பேரும் பேசிக்கிட்டு இருந்ததை நேத்துக் கேட்டேன்..."

ஹம்சினி நிதானத்துக்கு வந்தவளாய் மார்புக்குக் குறுக்கே கைகளைக் கட்டிக்கொண்டு கேட்டாள்.

"அவங்க என்ன பேசிக்கிட்டாங்க...?"

"உங்க பரம்பரைச் சொத்து விஷயமாகக் கோர்ட்ல ஏதாவது கேஸ் நடந்துட்டிருந்ததா...?"

"ஆமா... எங்களுக்கும் எங்க பெரியப்பா குடும்பத்துக்கும் பூர்வீக சொத்து தொடர்பா கடந்த இருபது வருஷமா ஹைகோர்ட்ல கேஸ் இருந்தது."

"அந்தக் கேஸ்ல ரெண்டு வாரத்துக்கு முந்தி தீர்ப்பு சொல்லிட்டாங்க. கேஸ் உங்க பக்கம் ஜெயம். கிட்டத்தட்ட பத்து லட்சரூபாய் சொத்து உங்களுக்குத்தான் சேரணும்னு ஜட்ஜ்மெண்ட். இதைப் பத்தி உங்க அண்ணன் உங்ககிட்ட ஏதாவது சொன்னாரா...?"

"இல்லை..."

"ஏன் சொல்லலை...! உங்களுக்கு அந்த விஷயம் தெரியக் கூடாதுன்னு நினைக்கிறார். இல்லையா...?"

"ம்... அப்படியும் இருக்கலாம்..."

"உங்களுக்கு இந்த விஷயத்தைத் தெரியப்படுத்தாமே இன்னொரு வழியிலும் உங்களை ஏமாத்தத் திட்டம் போட்டுகிட்டு இருக்காங்க. அந்தத் திட்டம் என்னாங்கிறதையும் நான் அட்சர சுத்தமாக் கேட்டுட்டேன். நீங்க கேட்கப் பிரியப்பட்டா சொல்றேன்."

"என்கிட்ட எல்லாத்தையும் சொல்லணும்ங்கிற முடிவுக்கு வந்த பின்னாடி என்ன தயக்கம்...? சொல்லுங்க. என்னோட அண்ணனும் அண்ணியும் நேத்து ராத்திரி என்ன பேசிக்கிட்டாங்க... அவங்க திட்டம் என்ன...?"

"நீங்க உங்க அண்ணியைப் பார்க்கிறதுக்காக அடிக்கடி ஹாஸ்பிட்டலுக்கு வருவீங்க. நாலைஞ்சு நாள் போனதும் உங்க

ப்ரதர் ராஜாமணி லேசாப் பேச்சைத் துவக்குவார். அண்ணிக்கு வைத்தியம்பார்த்ததில்நிறையப்பணம்செலவாயிடுச்சு. என்னோட அவனக் குறைவால ஆபீஸ் பணம் ஒரு லட்சம் வரைக்கும் காணாமப் போயிடுச்சு. ரெண்டு மாசத்துக்குள்ளே பணத்தைக் கட்டச் சொல்லி ஆபீஸ் நிர்வாகம் டைம் கொடுத்திருக்கு. ரெண்டு மாசத்துக்குள்ளே பணத்தைக் கட்டலைன்னா நிர்வாகம் போலீஸ்ல கம்ப்ளைண்ட் பண்ணிடுவாங்க. இந்தப் பிரச்னைகளிலிருந்து தப்பிக்க ஒரே வழி நமக்குச் சொந்தமா இருக்கிற வீட்டை சேல் பண்றதுதான். வீட்டை விக்கணும்னா உன்னோட சம்மதம் வேணும். அதுக்காக இந்த பேப்பர்ஸ்ல நீ சில கையெழுத்துக்களைப் போட வேண்டியிருக்கும்னு சொல்லி ஸ்டாம்ப் பேப்பர்ஸ்ல கையெழுத்து வாங்கப் போறார் உங்க அண்ணன்."

இந்திரா மறுபடியும் ஒரு தடவை சுற்றிலும் பார்வையை ஓடவிட்டுப் பின் தொடர்ந்தாள்:

"அந்த ஸ்டாம்ப் பேப்பர்ஸையெல்லாம் நீங்க படிச்சுப் பார்த்துட்டுக் கையெழுத்து போடறது பெட்டர்..."

"என்னோட அண்ணிக்கு உண்மையிலேயே உடம்பு சுகம் இல்லையா.. இல்ல அதுவும் நடிப்பா...?"

"உங்க அண்ணிக்கு டைபாயிட் காய்ச்சல் வந்ததுல கொஞ்சம் இளைச்சு உருக்குலைஞ்ச மாதிரி தெரியறாங்க. மத்தபடி எந்த வியாதியும் கிடையாது. ஒரு மாசம் வீட்ல இருந்து ரெஸ்ட் எடுத்துகிட்டா போதும். உடம்பு பழைய ஆரோக்கியத்துக்கு வந்துடும்..."

ஹம்சினி யோசனையாய் உதட்டைக் கடித்துக் கொண்டிருக்க இந்திரா தொடர்ந்தாள்;

"நேற்று ராத்திரிகூட உங்களைத் திட்டிகிட்டுதான் இருந் தாங்க...! இன்னிக்குப் பாச மழை பொழியறாங்க...! எல்லார்க்கும் நல்லது செய்ய நினைக்கிற உங்களுக்கு எதுவும் கெடுதல் வந்துடக் கூடாதேங்கிறதுக்காகத்தான் உங்களைத் தனியாக் கூட்டிகிட்டு வந்து சொல்லிட்டிருக்கேன்..."

"ரொம்ப தேங்க்ஸ் இந்திரா...! இனிமே அவங்களை நான் டீல் பண்ணிக்கறேன்.."

"நான் சொன்னதா..."

"பயப்படாதே! வெளியே யார்க்கும் தெரியாது." இந்திரா ட்யூட்டி பார்க்க வார்டுக்குப் போய்விட ஹம்சினி மெல்ல நடந்து

வராந்தாவின் ஜன்னலோரமாய்ப் போய் நின்றாள்.

மனம் ஈயக்குண்டாய் கனத்தது. காற்றுக்காக நுரையீரல்கள் தவிக்க உடம்பு முழுக்கப் புழுக்கம்.

'நர்ஸ் இந்திரா சொன்னது உண்மையாக இருக்குமோ...?'

'அவள் பொய் சொல்ல வேண்டிய அவசியம் இல்லையே?'

'கோர்ட் ஜட்ஜ்மெண்ட் பற்றி வக்கீல் பூவராகவனுக்குத் தெரியும். போன் பண்ணிக் கேட்டுப் பார்க்கலாமா?'

'வேண்டாம்...! அண்ணன் வாயிலிருந்தே விஷயம் வெளியே வரட்டும்...!'

யோசனைகளில் கரைந்தபடி ஜன்னல் கம்பிகளைப் பிடித்துக் கொண்டு நின்றிருந்த ஹம்சினியின் முதுகில் அந்தப் பழக்கமான ஆண் குரல் மோதியது.

"நான் காண்பதென்ன கனவா இல்லை நனவா?"

குரல் கேட்டுத்திரும்பினாள் ஹம்சினி.

சரண் நின்றிருந்தான். உதட்டில் புன்னகை. கையில் ஒரு ப்ளாஸ்டிக் பை.

ஹம்சினி தற்காலிகமாய் மனசில் இருந்த குழப்பங்களையெல்லாம் ஓரமாய் ஒதுக்கி வைத்துவிட்டு ஒரு சின்னச் சிரிப்போடு கேட்டாள்.

"எங்கே இந்தப் பக்கம்...?"

"அப்பாவுக்கு ஒரு எம்.ஆர்.ஐ. ஸ்கேன் எடுக்க வேண்டியிருந்தது. நேத்து வந்து எடுத்துட்டுப் போனோம். இன்னிக்கு ரிப்போர்ட் தர்றதா சொல்லியிருந்தாங்க. வந்தேன். இதோ வாங்கியாச்சு."

சொல்லிக் கொண்டே அந்தப் பெரிய ப்ளாஸ்டிக் பையை உயர்த்திக் காட்டினான் சரண்.

"உங்கப்பாவுக்கு என்ன ப்ராப்ளம்?"

"ஸ்பைனல் கார்டில் பெயின்..."

"ரிப்போர்ட் என்ன சொல்லுது...?"

"ரெண்டு ஜாயிண்ட்ஸ்லயும் கொஞ்சம் தேய்மானம் இருக்கு... மெடிசன்லேயே சரிப்படுத்திடலாம்னு டாக்டர் சொல்லியிருக்கார். ஆமா... நீங்க எங்கே இந்தப் பக்கம்?"

"என்னோட அண்ணி இங்கே அட்மிட் ஆகியிருக்காங்க..."

"ஓ...! அவங்களுக்கு என்ன உடம்பு...?"

"டைபாய்ட் ஃபீவர்..."

"இப்போ எப்படியிருக்கு...?"

"பரவாயில்லை..."

"இப்படியொரு சந்திப்பு நிகழும்னு நான் எதிர்பார்க்கவேயில்லை."

"அதுக்காக வருத்தப்படறீங்களா? இல்லை சந்தோஷப் படறீங்களா...?"

"என்னங்க இப்படி ஒரு கேள்வியைக் கேட்டுட்டீங்க... இன்னிக்கு ராத்திரி நானே உங்களை போன்ல காண்டாக்ட் பண்ண இருந்தேன். இங்கே உங்களை இப்படிப் பார்த்ததுல ரெட்டிப்பு சந்தோஷம்."

"இன்னிக்கு நீங்க என்னை போன்ல காண்டாக்ட் பண்ண இருந்தீங்களா...?"

"ஆமா..."

"எதுக்கு...?"

"என்னாங்க இது... நான் போட்ட அப்ளிகேஷனையே மறந்துட்டீங்களா...?"

"ஓ! உங்க கல்யாணம்...?"

"அதே... அதே...!"

ஹம்சினி தீர்க்கமாய்ச் சரணைப் பார்த்துக் கொண்டே கேட்டாள்.

"உண்மையிலேயே நீங்க என்னைக் கல்யாணம் பண்ணிக்க விரும்பறீங்களா...?"

"என்னங்க இது... பின்னே நான் பொய் சொல்லிட்டா இருக்கேன்...?"

"ஒரு வேளை உங்க அப்ளிகேஷனை நான் ரிஜெக்ட் பண்ணிட்டா...?"

"உடைஞ்ச போன மனசை ரிப்பேர் பண்ண ரொம்ப நாளாகும். அதுக்கப்புறம் அப்பா, அம்மா சொல்ற பொண்ணைக் கல்யாணம் பண்ணிகிட்டு ஒரு சராசரிக் கணவனா வாழ்க்கை நடத்த வேண்டியதுதான்."

ஹம்சினி உதட்டில் ஒட்ட வைத்துக் கொண்ட ஒரு சின்னப் புன்னகையோடு எதார்த்தமாய்ப் பேசிக்கொண்டு போகும் சரணையே இமைக்காமல் பார்த்தாள். அவன் கேட்டான்.

"என்ன அப்படி பார்க்கறீங்க...?"

"கல்யாணத்தை எப்ப வெச்சுக்கலாம்...?"

சரண் விழிகள் சட்டென்று விரிய, சுவாசிக்கத் திணறினான்.

"ஹ... ஹ... ஹம்சினி...!"

"டேட் ஃபிக்ஸ் பண்ணிடுங்க"

"நி... நிஜமாவா... சொ... சொல்றீங்க.. ?"

"இது அக்மார்க் நிஜம்...! திடீர்னு என் முடிவைச் சொன்னதுல உங்களுக்கு ஏற்பட்டிருக்கிற உணர்ச்சியையும் அதிர்ச்சியையும் என்னால புரிஞ்சுக்க முடியுது..."

சரணின் கண்களில் சந்தோஷம் பளபளத்தது. "நான் இவ்வளவு சீக்கிரத்துல உங்ககிட்டயிருந்து இப்படியொரு பாஸிட்டிவ் ரிப்ளை வரும்ன்னு கொஞ்சம் கூட எதிர்பார்க்கலை. இதுக்காக உங்களை ரொம்பவும் கன்வின்ஸ் பண்ண வேண்டியிருக்கும்ன்னு நினைச்சேன். உங்க வீட்டுப் பெரியவங்க யார்ன்னு சொல்லுங்க. நாங்க முறைப்படி பெண் கேட்டுவர வசதியாயிருக்கும்..."

ஹம்சினி விரக்தியாய்ப் புன்னகைத்தாள்.

"இனிமே எனக்குப் பெரியவங்கன்னு சொல்லப் போனா உங்க வீட்டைச் சேர்ந்தவங்க மட்டுமே..."

"ஹம்... சி.னி..."

"மறுபடியும் நாளைக்கு நாம பேசலாம்...! இன்னிக்கு எனக்குக் கொஞ்சம் முக்கியமான வேலையிருக்கு..."

"நாளைக்கு நான் ஹாஸ்டலுக்கு வரட்டுமா?"

"வாங்க..."

"எத்தனை மணிக்கு...?"

"சாயந்தரம் ஆறு மணியிலிருந்து ஏழு மணிக்குள்ளே..."

"தேங்க்யூ... ஹம்சினி... என் வாழ்க்கையிலே நான் ரொம்பவும் சந்தோஷப்படற நாள் இது. இப்பவே அப்பா அம்மாகிட்ட போய் விஷயத்தைச் சொல்லி நம்ம கல்யாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைப் பண்ண ஆரம்பிச்சுடறேன்..."

சொல்லிவிட்டு வேகவேகமாய் நடந்துபோகும் சரணையே இமைக்க மறந்த விழிகளோடு பார்த்தபடி நின்றாள் ஹம்சினி.

இரண்டு மணி நேரம் கழித்துத்தான் ஹம்சினி ஹாஸ்பிட்டலுக்கு திரும்பினாள்.

அபர்ணா அட்மிட் செய்யப்பட்டிருந்த அறைக்குள் காலடி எடுத்து வைத்த[illegible] ரா[illegible]மணி [illegible]பாலில் ஹார்லிக்ஸைக் கரைத்துக் கொண்டிருக்க[illegible] அபர்ணா[illegible] ஒரு வா[illegible] இதழை வாசித்துக் கொண்டிருந்த[illegible] [illegible]ினியை[illegible] [illegible] இருவருமே கலைந்தார்கள்.

ராஜாமணி சற்றே படபடப்பாய்க் கேட்டான். "எங்கே போயிட்டே ஹம்சினி?"

அபர்ணாவும் தன் பங்குக்குக் குறுக்கிட்டாள். "டாக்டர் ஜோதிலிங்கத்தைப் பார்த்துப் பேசப் போறதா சொன்னே?"

ஹம்சினி ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தாள்.

"டாக்டரைப் பார்க்கப் போயிருந்தேன். அவர் ரூம்ல இல்லை. அதுக்குள்ளே வேற ஒரு வேலை ஞாபகத்துக்கு வந்தது. வெளியே போயிட்டு வந்தேன்... அப்படியே கொஞ்சம் பழங்களும் வாங்கிட்டு வந்தேன்..."

"இதெல்லாம் எதுக்கம்மா... உன்னோட அண்ணிக்கு நீ வந்து அவளைப் பார்த்ததே பெரிய சந்தோஷம்...! நீ பேசற ஒவ்வொரு வார்த்தையும் அவளுக்கு டானிக் மாதிரி."

ஹாம்சினி நிமிர்ந்தாள்.

"அண்ணா! அண்ணிக்கு ஃப்ரூட்ஸ் வாங்கிட்டு வந்த மாதிரி உங்களுக்கும் ஒண்ணை வாங்கிட்டு வந்திருக்கேன்..."

ராஜாமணி லேசாய்த் திகைத்த மாதிரி பார்த்தான்.

"எனக்குமா...?"

"ம்..."

"என்ன...?"

தன் தோளில் தொங்கிக் கொண்டிருந்த ஹேண்ட் பேக்கைப் பிரித்த ஹம்சினி உள்ளேயிருந்து அந்த ப்ரௌன் கவரை எடுத்தாள்.

"இந்தாண்ணா..."

"என்னம்மா... இது...?"

"பிரிச்சுப் பாருங்க... தெரியும்..."

ராஜாமணி பிரித்தான். நான்கைந்து வெற்று ஸ்டாம்ப் பேப்பர்கள் வெளிப்பட்டன.

முகம் மாறினான்.

"என்னம்மா... இது...! வெற்று ஸ்டாம்ப் பேப்பர்களைக் கொடுத்திருக்கே...?"

ஹம்சினி ஒரு சின்னக் கேலிச் சிரிப்போடு சொன்னாள். "அது வெற்று ஸ்டாம்ப் பேப்பர் இல்லேண்ணா... ஒவ்வொரு ஸ்டாம்ப் பேப்பர்க்கு கீழேயும் நான் கையெழுத்துப் போட்டிருக்கேன்."

"ஏ... ஏ... எதுக்கம்மா கையெழுத்து போட்டிருக்கே...?"

"நீங்க எப்படி வேணும்னாலும் எழுதிக்க வசதியாகத்தான்."

"நீ என்னம்மா சொல்றே...?"

"அண்ணா! இந்தப் பாச நாடகம் இனியும் வேண்டாம். எனக்கு எல்லாம் தெரியும். நம்ம பூர்வீக சொத்து சம்பந்தமா ஹைகோர்ட்ல கேஸ் முடிஞ்சு தீர்ப்பு நமக்குச் சாதகமாக் கொடுக்கப்பட்டிருக்கு. பல லட்ச ரூபாய் சொத்து நமக்கு வரப்போகுது. உண்டா இல்லையா...?"

"அது... வந்து..."

"இனி எந்தப் பொய்யும் வேண்டாம். நான் சொத்துல பங்கு கேட்க வந்துடக்கூடாதுங்கிறதுக்காக அடுத்து நீங்க பண்ணப் போகிற சட்ட சித்து வேலைகளும் எனக்குத் தெரியும். எனக்கு நம்ம பூர்வீக சொத்துல ஒரு பைசா கூட வேண்டாம். நீங்க இந்த வெற்று ஸ்டாம்ப் பேப்பர்கள்ல என்ன வாசகத்தைப் போட்டு எப்படி எழுதிக்கிட்டாலும் சரியே... உங்க வசதிக்காகவே நாலைஞ்சு ஸ்டாம்ப் பேப்பர்கள்ல கையெழுத்துப் போட்டுக் கொடுத்து இருக்கேன். ஒரு ஸ்டாம்ப் பேப்பரை விடுதலைப் பத்திரமாவும் உபயோகப்படுத்திக்கலாம்..."

"ஹம்... சினி..."

அண்ணா ஏதோ சொல்ல முயல...

"வேண்டாம்ண்ணி...! நீங்களும் அண்ணனும் மௌனமாத் திட்டம் போட்டீங்க. நானும் அதே பாணியில் உங்க திட்டத்துக்கு உதவத் தீர்மானம் பண்ணிட்டேன். அதுக்கான முதல் ஸ்டெப்தான் இந்த ஸ்டாம்ப் பேப்பர்ஸ். இந்த வெத்து ஸ்டாம்ப் பேப்பர்ஸ்ல நீங்க என்ன வேணும்ன்னாலும் எழுதிக்கலாம்."

"ஹம்... சினி..." ராஜலட்சுமியின் முகம் இப்போது கரிச்சட்டியாய்க் கறுத்துப் போயிருக்க ஹம்சினி கோபம் தணியாமல் தொடர்ந்தாள்.

"அண்ணா! நீங்களும் அண்ணியும் என்மேல போலிப் பாசம் காட்டி நீங்க தயாரிச்ச ஸ்டாம்ப் பேப்பர்களில் நான் கையெழுத்துப் போடறதைக் காட்டிலும் நானே கையெழுத்துப் போட்டு வெத்து ஸ்டாம்ப் பேப்பர்களைக் கொடுத்துடறது உத்தமம் இல்லையா...? உங்க சொத்துல எனக்கு ஒரு பைசா வேண்டாம்... இந்த உலகத்துல பணத்தைக் காட்டிலும் உயர்வான விஷயம் இருக்கு. இனிமே என்னைப் புரிஞ்சுகிட்ட ஒருத்தர்க்காக நான் வாழப் போறேன்... குட் பை..."

ஹம்சினி கூச்சலிடைக்கப் பேசிவிட்டு வெளியே வந்தாள்.

ஹோஸ்டல் போய்ச் சேர்ந்த ஹம்சினியைத் தோழி ஒருத்தி

வாசலிலேயே வழி மறித்து சொன்னாள்.

"ஹம்சினி...! உன்னைப் பார்க்கிறதுக்காக ஒரு பெரியவர் வந்து ரொம்ப நேரமாக் காத்திட்டிருக்கார். மொதல்ல அவரைப் போய்ப் பாரு..."

"யார்... அவர்...?"

"தெரியலை... கொஞ்சம் பெரிய இடமாத் தெரியுது. பென்ஸ் கார்ல வந்தார்."

ஹம்சினி குழம்பியபடியே விசிட்டர்ஸ் ரூமை நோக்கி வேக நடை போட்டாள்.

'யாராக இருக்கும்...?'

# 7

ஹம்சினி வேக வேகமாய் நடைபோட்டு ஹாஸ்டலின் வரவேற்பறையை நோக்கிப் போனாள்.

வரவேற்பறை வெறிச்சோடிப் போயிருக்க பாலிவினைல் நாற்காலிகளில் ஒன்றில் சாய்த்திருந்தார் அந்தப் பெரியவர். அவரது வயது அறுபது இருக்கலாம். நரை முடியைப் படிய வாரியிருந்தார். கண்களில் கோல்ட் ப்ரேம் ஸ்பெக்ஸ் மின்ன பிஸ்கெட் நிற சஃபாரிக்குள் கச்சிதமாய் நுழைந்திருந்தார்.

'யார் இவர்...?'

ஹம்சினி திகைப்பாய்ப் பார்த்துக் கொண்டே அவரை நெருங்க அவர் புன்னகைத்தார்.

"என்னம்மா... என்னைத் தெரியுதா...?"

"ஸாரி...! தெரி... யலை... யே..."

"நான் சரணோட அப்பா..."

"ஓ...!" குபீரென்று ஒரு மலர்ச்சிக்கு உட்பட்ட ஹம்சினி கை குவித்தாள்.

"வணக்கம் ஸார்..."

"இப்படி உட்காரம்மா..."

ஹம்சினி பக்கத்து இருக்கையில் உட்கார்ந்தாள்.

"ஸாரி... ஸார்... எனக்காக நீங்க ரொம்ப நேரமா வெய்ட் பண்ணிகிட்டு இருக்கீங்க போலிருக்கு..."

"இல்லேம்மா... வந்து ஒரு இருபது நிமிஷம்தான் ஆச்சு. நோ ப்ராப்ளம்..."

"சொல்லுங்க ஸார்... என்ன விஷயம்?"

"ஒண்ணுமில்லேம்மா... உனக்கொரு தேங்க்ஸ் சொல்லிட்டுப் போலாம்ன்னு வந்தேன்."

"தேங்க்ஸா...? எதுக்கு ஸார்...?"

"என் பையன் சரணைக் கல்யாணம் பண்ணிக்கச் சம்மதம் கொடுத்துட்டியாமே...?"

ஹம்சினியின் கண்களில் வெட்கம் ஒரு விநாடி நேரம் மின்னி மறைந்தது.

"ஆமா... ஸார்..."

"அவனுக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமோ...? தரையில் கால் நிக்கலை... கல்யாணத்தைத் தள்ளிப் போடக்கூடாதாம். வாரம் பத்து நாளைக்குள்ளே ஒரு நல்ல முகூர்த்த நாளாப் பார்த்துக் கல்யாணத்தை நடத்திடணுமாம்... உன் வீட்டு சம்பந்தப்பட்ட பெரியவங்க யாராவது இருந்தா சொல்லும்மா... நான் அவங்களைப் பார்த்துப் பேசணும்..."

ஹம்சினி சிரித்தாள். "இப்போ எனக்கு சொந்தம்ன்னு சொல்லிக்க மூணே மூணு பேர்தான் இருக்காங்க ஸார்."

"அவங்க யார்ன்னு சொல்லும்மா..."

"எனக்கு கணவரா வரப்போகிற உங்க மகன், எனக்கு மாமனாரா வரப்போகிற நீங்க... எனக்கு அத்தையா வரப்போகிற உங்க மனைவி. இப்போதைக்கு இந்தச் சொந்தம்தான் எனக்கு..."

அவர் அவளை வியப்பாய்ப் பார்த்தார்.

"என்னம்மா இப்படிச் சொல்றே...! உனக்கு ஒரு அண்ணனும் அண்ணியும் இருக்கிறதாகச் சரண் சொன்னானே...?"

"இருந்தாங்க...! இப்ப இல்லை..."

"நீ சொல்றது புரியலையேம்மா..."

"என்னோட உணர்ச்சிகளைக் கொலை பண்ணக்கூடியவங்க யாராக இருந்தாலும் அவங்களை நான் சொந்தமா நினைக்கிறது கிடையாது ஸார்..."

"நீ அவங்களால பாதிக்கப்பட்டிருக்கேன்னு நினைக்கிறேன்."

"ரொம்பவே .."

"சரி... இனிமே நாங்கதான் உனக்கு உறவுன்னு சொல்லிட்டே! கல்யாணத்தை எப்ப வெச்சுகிட்டா உனக்கு வசதியாயிருக்கும்."

"என்னோட வசதி இதில் முக்கியமில்லை. உங்களோட விருப்பம்தான் முக்கியம்... நீங்க எப்பக் கல்யாணத்தை

வெச்சுகிட்டாலும் எனக்குச் சம்மதமே..."

"அடுத்த மாசம் பதினாலாம் தேதி... ஒரு அருமையான முகூர்த்தம் இருக்கு. அந்தத் தேதியையே ஃபிக்ஸ் பண்ணிடலாமா?"

"ம்..."

சிரிப்போடு தலையாட்டினாள் ஹம்சினி.

"அப்புறம்... சரண் சார்பில் இன்னொரு கோரிக்கை."

"என்ன ஸார்...?"

"இந்த ஹாஸ்டல் வாசத்துக்கு ஒரு முற்றுப்புள்ளி வெச்சுட்டு எங்களுக்குச் சொந்தமான ஒரு வீட்ல நீ தங்கிக்கணும்..."

"ஸாரி... ஸார்... அது முடியாது..."

"ஏம்மா...?"

"அடுத்த மாதம் பதிமூணாம் தேதி வரைக்கும் இதே ஹாஸ்டல்லதான் இருக்க விரும்பறேன்."

"அதுக்கு ஸ்டெடியா ஏதாவது காரணம் உண்டா?"

"பெரிசாக் காரணம் எதுவும் இல்லை. இப்போ நான் வேலைக்குப் போய்க்கிட்டிருக்கிற ஆபீஸ் பக்கத்துலதான் இருக்கு. உடனடியா நான் ஆபீஸ் வேலையை விட முடியாது. அது தனியார் ஆபீஸ். சில வேலைகளை நான் கம்ப்ளீட் பண்ணிக் கொடுக்க வேண்டியிருக்கு. அதுக்கு ஹாஸ்டல்ல இருந்தாதான் வசதி... கல்யாணத்துக்கப்புறம் நான் வேலைக்குப் போகமாட்டேன்..."

"சரி...! வாரத்துக்கு ரெண்டு தடவையாவது வீட்டுக்கு வந்துட்டுப் போம்மா. கல்யாண ஏற்பாடுகளை நீயும் இருந்து கவனிக்கணும். சரணோட அம்மா படுக்கையை விட்டு எழமாட்டா. சரண் ஒண்டியா எல்லா வேலைகளையும் பார்க்க முடியாது. நீ கொஞ்சம் கோவாப்ரேட் பண்ணணும்..."

"ஷ்யூர்... ஸார்..."

"அப்புறம் உன்கிட்ட இன்னொரு சின்னக் கோரிக்கை"

"சொல்லுங்க ஸார்."

"நீ இப்படி வார்த்தைக்கு வார்த்தை ஸார் போட்டுப் பேசறது எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கலை. அடுத்த தடவை நான் உன்னைப் பார்க்கும்போது நீ என்னை மாமான்னு கூப்பிடணும்."

ஹம்சினி வெட்கமாய்த் தலையசைத்துப் புன்னகைக்க, சரணின் அப்பா புறப்பட்டார்.

அவருடைய கார் புறப்பட்டுப் போகும் வரை காத்திருந்த

ஹம்சினி பின் வராந்தாவில் நடந்து தன்னுடைய அறையை நோக்கிப் போனாள்.

நீண்ட நாட்களுக்குப் பிறகு மனதில் இருந்த கனம் காணாமல் போய் உடம்பே ஒரு இலவம்பஞ்சுத் துணுக்காய் மாறியிருந்தது. 'பணத்துக்கு மதிப்புக் கொடுக்காத சில பேர் இந்த உலகத்தில் இருக்கத்தான் செய்கிறார்கள்.'

சந்தோஷ நடைபோட்டு அறைக்குள் நுழைந்தாள் ஹம்சினி. அவளுடைய அறைத் தோழி சாருமதி இருட்டில் ஜன்னல் அருகே ஒரு நாற்காலியைப் போட்டு அதில் சாய்ந்தபடி வெளியே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். ஹம்சினி உள்ளே நுழைந்ததையும் அவள் கவனிக்கவில்லை.

"என்ன சாரு...! அடுத்த கதைக்கான கருவை யோசனை பண்ணிட்டிருக்கியா...?"

"...."

"சாரு...! உன்னைத்தான்!" ஹம்சினி சாருமதியின் தோளைப் பிடித்து உசுப்பியதும் சட்டென்று சுதாரிப்புக்கு வந்தாள்.

"ஓ...! ஹம்சினி...! எப்ப வந்தே...?"

"சரியாப் போச்சு... நான் வந்ததுகூடத் தெரியாமே அப்படி என்ன யோசனை...?" கேட்டுக் கொண்டே ட்யூப்லைட்டின் ஸ்விட்ச்சைத் தேய்த்து அறையை வெளிச்சத்துக்கு கொண்டு வந்தவள் சாருமதியின் முகத்தைப் பார்த்ததும் லேசாய்த் திடுக்கிட்டாள்.

"என்ன சாரு... அழுதியா...?"

"இல்லையே..."

"பொய் சொல்லாதே... கண்ணெல்லாம் கலங்கி முகமே வீங்கின மாதிரி இருக்கு..."

"அது ஒண்ணுமில்லை... கொஞ்சம் தலைவலி."

"இதோ பார்...! உனக்குத் தலைவலி வந்தா எப்படியிருப்பேன்னு எனக்குத் தெரியும்... நீ அவ்வளவு சுலபத்துல அழமாட்டியே... என்ன விஷயம் சொல்லு...!"

சாருமதி சில விநாடிகள் தயங்கிவிட்டுச் சொன்னாள்.

"என்னோட கணவரை ஜெயிலிலிருந்து விடுதலை பண்ணிட்டாங்களாம்..."

"அட...! இன்னும் நாலைஞ்சு மாசம் இருக்குன்னு சொன்னியே...?"

"சொன்னேன்...! ஏதோ தண்டனை காலத்தைக் குறைச்சுட்டாங்

களாம்..."

"உனக்கெப்படி அவர் விடுதலையானது தெரிஞ்சுது?"

"ஒரு மணி நேரத்துக்கு முன்னாடி அவரே போன் பண்ணிப் பேசினார்..."

"என்ன சொன்னார்...?"

"குடும்பம் நடத்தக் கூப்பிட்டார். ரெண்டுமணி நேரத்துக்குள்ளே இந்த ஹாஸ்டல் ரூமைக் காலி பண்ணிட்டு வீட்டுக்கு வந்துடணுமாம்..."

"நீ என்ன சொன்னே...?"

"பெண்களை வெச்சு வியாபாரம் பண்ணி ஜெயிலுக்கு போய்ட்டு வந்த உன்கூட இனிமே குடும்பம் நடத்த முடியாதுன்னு சொல்லிட்டேன். அதுக்கு..."

"அதுக்கு...?"

"நீ இன்னும் ரெண்டுமணி நேரத்துக்குள்ளே ஹாஸ்டல் அறையைக் காலி பண்ணிட்டு வீட்டுக்கு வந்து சேரணும். இல்லேன்னா நான் அங்கே வந்துருவேன்னு சொன்னார். அதான் மனசுக்குள்ளே ஒரே உதைப்பாயிருக்கு. அந்த ஆளை எப்படி ஃபேஸ் பண்றதுன்னு எனக்குத் தெரியலை..."

"அந்த ஆள் வரட்டும். நான் பேசிக்கிறேன். நீ சாப்பிட்டியா...?"

"இல்ல..."

"வா... மெஸ்ஸுக்குப் போய்ச் சாப்ட்டுட்டு வந்து அப்புறமா பேசிக்கலாம்..."

"எனக்குப் பசிக்கலை..."

"எல்லாம் பசிக்கும். வா..." ஹம்சினி வற்புறுத்திக் கூப்பிட்டுக் கொண்டிருக்கும் போதே அறை வாசலில் நிழல் தட்டியது.

திரும்பினார்கள்.

ஹாஸ்டலின் பெண் அட்டெண்டர்.

"என்ன மல்லிகா...?"

"சாருமதி அம்மாவைப் பார்க்கிறதுக்காக அவங்க வீட்டுக்காரர் வந்திருக்கார்..."

சாருமதி கண்களில் கலக்கம் பரவ ஹம்சினியைப் பார்க்க ஹம்சினி மல்லிகாவை ஏறிட்டாள்.

"சாருமதி இல்லேன்னு போய்ச் சொல்லு. இப்ப மட்டும் இல்ல எப்ப வந்தாலும் சரி இதே பதிலைச் சொல்லு..."

"சரிங்கம்மா..." மல்லிகா போய்விட சாருமதி இரண்டு

கைகளாலும் நெற்றியைப் பிடித்துக் கொண்டு தளர்ந்து உட்கார்ந்தாள்.

"எனக்கு பயம்மாயிருக்கு ஹம்சினி..."

"நீ எதுக்கும் பயப்படாதே... வா மெஸ்ஸுக்குப் போய்ச் சாப்ட்டுட்டு வரலாம்."

"அந்த ஆள் ஒரு முரடன்..."

"இருக்கட்டுமே..."

அறையைப் பூட்டிக் கொண்டு வர்ராந்தாவில் நடந்து மெஸ் இருந்த திசை நோக்கிப் போனார்கள்.

பாதி வராந்தாவைக் கடந்திருந்தபோது சாருமதியின் கணவன் எத்திராஜ் வேஷ்டியைத் தூக்கிக் கட்டிக்கொண்டு கோப நடையில் வந்து கொண்டிருந்தான். முகத்தில் ஆத்திரம் அலையடித்தது.

சாருமதி ஒதுங்கினாள்.

"வ... வ... வர்றாரு..."

"வரட்டும்...! வரட்டும்...!"

எத்திராஜ் பக்கத்தில் வந்து கால்களைப் பரப்பிக் கொண்டு நின்றான். கண்களில் சிவப்பு. தாடையில் முள் முள்ளாய் ரோமம்...

"என்னடி... திமிரா...? இருந்துகிட்டே இல்லேன்னு சொல்லியிருக்கே...?"

"அவ சொல்லலை...! நான்தான் சொல்லிவிட்டேன்"

எத்திராஜின் பார்வை சட்டென்று ஆணியடித்த மாதிரி ஹம்சினியின் முகத்தில் நிலைத்தது.

"என்னது! நீ சொன்னியா...?"

"ஆமா..."

"நீ யார்டி சொல்லிவிடறதுக்கு...?"

"இதோ பார்...! பேசற வார்த்தையில மரியாதை இருக்கணும். லேடீஸ் ஹாஸ்டலுக்குள்ளே இப்படி அத்துமீறி வரக்கூடாது... தெரியுமா உனக்கு?"

"நான் என் பொண்டாட்டியைப் பார்க்கத்தான் வந்தேன். அதுக்காக நான் யார்கிட்டேயும் பர்மிஷன் வாங்க வேண்டிய அவசியம் இல்லை..."

"சரி... உன் பொண்டாட்டியை நீ பார்த்துட்டியில்ல. இனிப் போயிடு..."

"கூட்டிட்டுப் போயிடறேன்..."

"அவ வரமாட்டா...! உன்கூட இனிமே குடும்பம் நடத்த அவ

தயாராயில்லை..."

எத்திராஜ் வெகுண்டான்.

"நீ பாட்டுக்கு பதிலுக்கு பதில் பேசிட்டிருக்கே. இது எனக்கும் என் பொண்டாட்டிக்கும் உள்ள பிரச்னை. நீ மரியாதையாத் தள்ளி நில்லு..." சொல்லிக் கொண்டே எத்திராஜ் சாருமதியை நோக்கி நகர ஹம்சினி குறுக்கே வந்து நின்றாள்.

"மரியாதையாத் திரும்பிப் போயிடு."

"அட... போகலைன்னா என்ன பண்ணுவே?"

"போலிஸுக்கு போன் பண்ண வேண்டியிருக்கும்."

"எங்கே... போன் பண்ணு பார்க்கலாம்..."

ஹம்சினி பக்கத்தில் இருந்த ஹாஸ்டல் அலுவலக அறையை நோக்கி நடக்க முயல, எத்திராஜ் வெகுண்டான்.

"என்ன திமிர்டி உனக்கு...?" இடது காலை உயர்த்தி ஹம்சினியின் இடுப்பை மூர்க்கமாய் எட்டி உதைக்க ஹம்சினி பத்தடி தள்ளிப்போய் நிலைகுலைந்து விழுந்தாள். வராந்தா ஓரம் இருந்த சிமெண்ட் தொட்டியின் விளிம்பில் பின்னந்தலை மோத ரத்தம் சிதறியது.

"ஹ... ம்... சி... னி..." சாருமதி வீறிட்டுக் கொண்டு பார்த்தாள்.

ஹாஸ்பிட்டல்.

ஐ.ஸி.யூனிட்டுக்கு வெளியே சரண், சரணின் அப்பா இருண்டு போன முகங்களோடு நின்றிருக்க லேடீஸ் ஹாஸ்டலைச் சேர்ந்த சில பெண்கள் சேலைத் தலைப்புகளால் வாயைப் பொத்தி அழுகைக்கு அணை போட்டுக் கொண்டிருந்தார்கள். மையமாய் சாருமதி.

ஒருமணி நேரத்திற்குப் பிறகு சீஃப் டாக்டர் ஐ.ஸி. யூனிட்டிலிருந்து வெளிப்பட்டார். எல்லோரையும் ஒரு பார்வை பார்த்துவிட்டு மெல்லிய குரலில் கேட்டார்.

"இந்தப் பொண்ணுக்கு வேண்டியவங்க யாரு...?"

சரணும் அவனுடைய அப்பாவும் டாக்டரை நோக்கி நகர்ந்தார்கள். அவர் ஏறிட்டார்.

"ப்ளீஸ் கம் வித் மீ..."

தொடர்ந்தார்கள்.

டாக்டர் அவருடைய அறைக்குள் நுழைந்ததும் நாற்காலிகளைக் காட்டி உட்காரச் சொல்லிவிட்டு கேட்டார்.

"அந்தப் பெண் உங்களுக்கு என்ன உறவு?"

சரண் கண்கள் கலங்கக் குரல் தழுதழுக்கச் சொன்னான்.

"அந்தப் பெண் ஹம்சினியைக் கல்யாணம் பண்ணிக்க இருந்தேன் டாக்டர்."

"அவ பேரண்ட்ஸ்...?"

"பேரண்ட்ஸ் இல்லை. அண்ணன் அண்ணி இருக்காங்க. பட் எந்த காண்ட்டாக்ட்ஸும் கிடையாது."

"அப்படீன்னா அந்தப் பொண்ணுக்கு இப்போ கேர் டேக்கர்ஸ் நீங்கதான்..."

"எஸ்..." என்ற சரண் கவலையும் பதட்டமும் கலந்த குரலில் கேட்டான்.

"டாக்டர்... ஹௌ ஈஸ் ஷீ...?"

டாக்டர் சில விநாடிகள் மௌனித்துவிட்டு உதடுகளை அசைத்தார். "ஸாரி... டு... ஸே... திஸ்... அந்தப் பெண் உயிர் பிழைக்க வாய்ப்பு இல்லை. ஸிவியர் ப்ரெயின் ஹெமரேஜ்."

"டாக்... டாக்டர்..." சரண் அவருடைய கைகளைப் பற்றிக் கொண்டான். "என்ன செலவானாலும் பரவாயில்லை. லைஃப் சேவிங் ட்ரக்ஸ் எந்த ஃபாரின் கண்ட்ரியில் இருந்தாலும் பரவாயில்லை. வரவழைச்சு..."

"ஸாரி...! எதுவும் பிரயோஜனப்படாது. இட் ஈஸ் ஆல் மோஸ்ட் க்ளினிகல் டெத். உயிரில்லாத மூளை. ஹார்ட்டை மெஷின் வெச்சு பம்ப் பண்ணிட்டிருக்கோம். அந்த மெஷினை ரிமூவ் பண்ணிட்டா எல்லாம் முடிஞ்சுடும்."

சரணின் அப்பா உறைந்து போகச் சரண் இரண்டு கைகளாலும் முகத்தைப் பொத்திக் கொண்டு மேஜையின் மேல் கவிழ்ந்து அழ ஆரம்பித்தான்.

"ப்ளீஸ் கண்ட்ரோல் யுவர் செல்ஃப்! உங்ககிட்ட இப்போ இன்னொரு விஷயத்தைப் பத்தியும் பேசியாகணும்."

அழுது கொண்டிருந்த சரண் நீர் வழியும் கண்களோடு நிமிர்ந்தான். உறைந்து போயிருந்த சரணின் அப்பா கேட்டார்.

"என்ன விஷயம் டாக்டர்...?"

"இங்கே ஹம்சினி அட்மிட் பண்ணப்பட்டபோது ஒரு அஞ்சு நிமிஷ நேரத்துக்கு அவ சுயநினைவோடு இருந்தா. என் கூடப் பேசவும் செஞ்சா..."

"என்ன பேசினா டாக்டர்...?"

"தான் உயிர் பிழைப்போம்ங்கிற நம்பிக்கை ஹம்சினிக்கே

இல்லாததினால அவளோட கடைசி ஆசையா ஒண்ணைச் சொன்னா..."

சரணும் அவனுடைய அப்பாவும் டாக்டரின் முகத்தையே பார்த்துக் கொண்டிருக்க அவர் தொடர்ந்தார்.

"என உயிர் பிரியறதுக்கு முந்தி என்னோட உடல் உறுப்புகளை எடுத்துத் தேவையானவங்களுக்கு 'கேடாவரிக்' முறையில் பொருத்த ஏற்பாடு பண்ணுங்க டாக்டர்ன்னு சொன்னா. 'நான் உயிரோடு இருந்தபோது என்னால முடிஞ்ச உதவிகளை எல்லார்க்கும் பண்ணினேன். என்னோட இறப்புக்குப் பின்னாடியும் இந்த வகையில் உதவி பண்ண விரும்பறேன்'னு சொன்னா. கடைசியா ஹம்சினி பேசியது இதுதான்..."

சரணின் கண்களில் நீர் புதிதாய்ச் சுரக்க, டாக்டர் தொடர்ந்து பேசினார்.

"இந்த ஹாஸ்பிட்டலில் மாற்றுச் சிறுநீரகம் வேண்டியும் மாற்றுக் கல்லீரல் வேண்டியும் நிறையப் பேர் இருக்காங்க. அவங்கள்ல யாருக்காவது ஹம்சினியோட சிறுநீரகம், கல்லீரலை உபயோகப் படுத்திக்கலாம்ன்னு இருக்கேன். உங்களுக்கு இதுல ஏதாவது ஆட்சேபணை உண்டா...?"

"நோ டாக்டர்..." சரண் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு டாக்டரை ஏறிட்டான்.

"தன் கிட்ட இருக்கிற எல்லாத்தையும் பிறர்க்குக் கொடுக்கிறதுக் காகவே பிறந்தவ ஹம்சினி. அவளோட கடைசி ஆசையையும் நிறைவேத்திடுங்க டாக்டர். ஹம்சினி என்னைக் கல்யாணம் பண்ணிக்கச் சம்மதம்ன்னு எந்த நிமிஷம் சொன்னாளோ அந்த நிமிஷமே எனக்கும் அவளுக்கும் கல்யாணம் நடந்துட்ட உணர்வு. அவளுக்குப் பண்ண வேண்டிய எல்லாக் காரியங்களையும் கணவன் என்கிற முறையில் நானே பண்ணிடறேன்! எஸ்... ஷீ... ஈஸ்... மை ஒய்ஃப்..."

சொல்லிவிட்டு மறுபடியும் புதிதாய் அழ ஆரம்பித்தான் சரண். ஹம்சினிக்காகத் தன் கண்ணீர் சிந்தப்படுவது கூடப் பெரிய பாக்கியமாகவே சரணின் மனதுக்குப்பட்டது.

ஒரு மாதம் கழித்து-

ஹாஸ்டலில் இருந்த சாருமதிக்கு அந்த டெலிபோன் அழைப்பு வந்தது.

"ஹலோ... எழுத்தாளர் சாருமதியா?"

"ஆமா..."

"கலைமகள் பத்திரிகையிலிருந்து நான் ஆசிரியர் பேசறேன்மா."

"வணக்கம் ஸார்..."

"வணக்கம்...! என்னம்மா உன் தோழி ஹம்சினியை மையமா வெச்சு கலைமகள்ல ஒரு தொடர்கதை எழுதப்போறதா சொன்னே. என்னிக்குத் தொடரை ஆரம்பிக்கிறே...?"

"வர்ற மாசம் ஆரம்பிச்சுடலாம் ஸார். ரெண்டு அத்தியாயம் கூட எழுதிட்டேன்..."

"தொடர்கதைக்கு தலைப்புச் சொல்லிடம்மா. இந்த இஷ்யூவிலேயே விளம்பரம் பண்ணிடலாம்..."

"தலைப்பு...?"

"ம்... சொல்லும்மா... நோட் பண்ணிக்கறேன்."

**முகம் இல்லாத பொம்மைகள்!**

(முற்றும்)